உ

கணபதிதுணை.

திருப்பூவணம்

கந்தசாமிப்புலவரியற்றிய

# திருப்பூவணநாதருலா.

இஃது

உத்தமதானபுரம்

மஹாமஹோபாத்தியாய

## வே. சாமிநாதையரால்

கையெழுத்துப் பிரதிகளைக்கொண்டு பரிசோதித்து

தாம் நூதனமாக எழுதிய அரும்பதவுரைமுதலியவற்றுடன்

சென்னபட்டணம்

கமர்ஷியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

ருத்திரோத்காரிஸ்ரீ சித்திரைமீ

1923.

இரண்டாம் பதிப்பு.

விலை அணா 5.






# இப்புத்தகத்திலடங்கியவை.

அரும்பதவுரை முதலியவற்றில் எடுத்துக்காட்டிய

## நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்புக்கள்.



அருணைக் - அருணைக்கலம்பகம்.
ஏகாம்பர - ஏகாம்பரநாதருலா.
கந்த - கந்தபுராணம்.
காசிக் - காசிக்கலம்பகம்.
காஞ்சிப் - காஞ்சிப்புராணம்.
சிதம்பரச்செய் - சிதம்பரச்செய்யுட்கோவை.
சிலப் - சிலப்பதிகாரம்.
சீவக - சீவகசிந்தாமணி.
சுந்தர - சுந்தரமூர்த்திநாயனார்.
செய் - செய்யுள்.
செவ்வந்திப் - செவ்வந்திப்புராணம்.
தமிழ்நா - தமிழ்நாவலர்சரிதை.
திருக்குற்றாலப் - திருக்குற்றாலப்புராணம்.
திருஞான - திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்; திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம்.
திருநா - திருநாவுக்கரசுநாயனார்.
திருப்பூவணப் - திருப்பூவணப்புராணம்.
திருவாலவாய் - திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்.
திருவிடை - திருவிடைமருதூருலா.
திருவிடை. மும்மணி - திருவிடைமருதூர்மும்மணிக்கோவை.
திருவிளை - திருவிளையாடல்.
திருவெங்கை - திருவெங்கையுலா.
தே - தேவாரம்.
நைடத - நைடதம்.
பதி - பதிகம்.
பிரபுலிங்க - பிரபுலிங்கலீலை.
பெரிய - பெரியபுராணம்.
மணி - மணிமேகலை.
முத்துக் - முத்துக்குமாரசாமிபிள்ளைத்தமிழ்.
வருணகுலா - வருணகுலாதித்தன்மடல்.



உ

கணபதி துணை.

# முகவுரை.




---

## திருவாசகம்.

"பூவண மதனிற் பொலிந்தினி தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும்."

## திருவிளையாடல்.

"பருங்கை மால்வரைப் பூழியன் பைந்தமிழ் நாட்டி
விரங்கு தெண்டிரைக் கரங்களா லீர்ம்புனல் வையை
மருங்கி னந்தன மலர்ந்தபன் மலர்கடேய்ப் பணியப்
புரங்க டந்தவ னிருப்பது பூவண நகரம்."

**திருப்பூவணநாதருலா**வென்பது, திருப்பூவணத்திற் கோயில்கொண் டெழுந்தருளிய சிவபெருமான்மீது கவிஞர்பெருமானுகிய திருப்பூவணம்கந்த சாமிப் புலவரியற்றியது ; இதிலுள்ள கண்ணிகள் சகூகூ.

**திருப்பூவண**மென்பது, பாண்டிநாட்டுள்ள தேவாரம்பெற்ற சிவஸ்தலங்கள்பதினான்கனுள் ஒன்று ; இதற்குரிய தேவாரப்பதிகம் - ச (திருஞான. பதி. உ ; திருநா. பதி. க ; சுந்தர. பதி. க); கருவூர்த்தேவர் திருவிசைப்பா - க. வடமொழி தென்மொழி இரண்டிலும் இதற்குப் புராணங்களுள்ளன.

**ஸ்தலவிநாயகர்கள்:** கற்பகவிநாயகர், மணிமந்திரவிநாயகர், ஒட்டுக்கல் வெள்ளைவிநாயகர்.

**ஸ்வாமியின் திருநாமங்கள்:** புஷ்பவனநாதர், பாஸ்கரபுரீசர், பிதிர்மோக்ஷபுரீசர், பிரஹ்மபுரீசர், ரகஸ்யசிதம்பரேசர், திருப்பூவணேசர், அடைவார் வினைதீர்ப்பவரென்பன ; ஸந்நிதி கிழக்கு.

**அம்பிகையின் திருநாமங்கள்:** சுந்தரநாயகி, தடிதம்பை, ஸௌவர்ணவல்லி, அன்னபூரணி, அழகியநாயகி, அழகியமின், மின்னனையாள், மின்னம்மை, மின்னுளென்பன. அம்பிகையின் திருக்கோயில், ஸ்வாமியின் திருக்கோயிலுக்கு வலப்பக்கத்துள்ளது.

**நாயகர் திருநாமங்கள்:** ஸௌந்தரநாயகர், அழகியநாயகர், அழகுக்கு ஆருமொவ்வாதவரென்பன ; பொன்னனையாளுடைய நகத்தழும்பைப் பெற்றருளியவர் இவரே ; அத்தழும்பை இன்றும் காணலாகும்.

**ஸ்தலத்தின் திருநாமங்கள்:** புஷ்பவனம், புஷ்பவனகாசி, புஷ்பபுரம், பாஸ்கரக்ஷேத்திரம், பிதிர்மோக்ஷபுரி, பிரஹ்மபுரி, ரஹஸ்யசிதம்பரம், திருப்பூவணம், திருப்பூவணக்காசியென்பன ; பூவையெனவும் திருப்புவனமெனவும் இதன்பெயர் வழங்கும்.

**தீர்த்தங்கள்:** வையை, மணிகர்ணிகை அல்லது மணிகுண்டம், தேவி குண்டம், பாபநாசம், பிரஹ்மதீர்த்தம், லக்ஷ்மிதீர்த்தம், மார்க்கண்டேய தீர்த்தம், நளதீர்த்தம், விஷ்ணுதீர்த்தம், வஸிஷ்டதீர்த்தமுதலியன.

**ஸ்தலவிருக்ஷம்:** பலா.

**வழிபட்டுப்பேறுபெற்றோர்கள்:** விநாயகர், உமாதேவியார், திருமால், திருமகள், பிரஹ்மதேவர், அகஸ்தியர், காளி, சூரியன், திருஞசனர், தருமஞ் ஞர், ஸூஜ்ஜோதிமஹாராஜா, மார்க்கண்டேயர், வஸிஷ்டர், இந்திரன், சந்திரன், நளன், சாகாசனர், பொன்னனையாள் முதலியோர்கள்.

இந்தஸ்தலத்தில் என்பானது, மலர் அல்லது சிலையாகுமென்பது ஐதிஹ்யம். வையைநதியிலுள்ளமணல்கள் சிவலிங்கங்களாகத் தமக்குத் தோற்றின மையின், அவற்றை மிதித்தற்கஞ்சி, தரிசித்ததற்கு அக்கரையிலேயே நின்ற திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் முதலியோர்கள்பொருட்டுச் சிவபெருமான் திருநந்திதேவரைச் சிறிதுசாய்ந்திருக்கும்படி கட்டளையிட, அவர் அப்படியே சாய்ந்திருந்தனரென்று பெரியோர் சொல்லுகின்றனர்; அந்தத் தோற்றத்தை இன்றும் காணலாகும். இதனை, "செப்பு மூவர்சொற் றமிழ்த்துதிக்க விருப் பொடு வந்துவையை மணற்சிவ லிங்கமென மனத்தெணி முன்புவட கரைக் கவர் நின்றுதமிழ் பாடுபொழு தேயிடப மாமுதுகு சாயும்வகை யேசெய்து முன் மூவர் தரிசிக்கமகிழ் நேசர்" **(புட்பவனநாதர் வண்ணம்)** என்பதனுலு முணர்க. **பொன்னனையாள்மடமென்றும், பொன்னனையாள்மண்டபம்** என்றும் இரண்டுகட்டிடங்கள் இத்தலத்திலுள்ளன; அவற்றுள் முன்னது பொன்னனையாள் சிவனடியார்களை அமுதுசெய்வித்தஇடமென்றும் பின் னது அவள்பொருட்டு மதுரைச் சோமசுந்தரக்கடவுள் வந்து ரஸவாதம்செய் தருளியஇடமென்றும் சொல்லுகின்றனர். கோரக்கஸித்தருடைய ஆலய மொன்று இத்தலத்தில் இருக்கின்றது. இதுநிற்க.

**உலா**வென்பது தமிழிலுள்ள தொண்ணூற்றுறுவகைப்பிரபந்தங்களுள் ஒருவகைநூல்; ஒருதலைவன் பேதை முதற் பேரிளம்பெண் ஈருகிய ஏழுபருவ மாதர்களும் தன்னைக்கண்டு காதல்கூர வீதியிற் பவனிபோந்தானென்று கலிவெண்பாவாற்கூறப்படவேண்டுமென்பது இந்நூலுக்குரியவிதி. இங்கே பாட்டுடைத்தலைவர் திருப்பூவணநாதர்; மாதர்களென்றது, உருத்திர கணிகையரை; ஏழுபருவங்களாவன: (ஐந்தாம்ஆண்டுமுதல் ஏழாம்ஆண்டளவும்) பேதை; (அ - கக) பெதும்பை; (கஉ - ௩) மங்கை; (கச - கூ) மடந்தை; (உ௦ - உரு)அரிவை; (உசு - ௩க) தெரிவை; (௩உ - ச௦) பேரிளம் பெண். இவற்றுள் ஒவ்வொருபருவத்தையும் வேறுபடுத்தி வருணிப்பது முதலியன கஷ்டமாகவிருந்தாலும் பெதும்பைப்பருவத்தை வருணித்தல் மிகவும் கஷ்ட மென்பர்; "பேசு முலாவிற் பெதும்பைபுலி" என்பது **ஔவையார்** திருவாக்கு.

இந்தவுலா, திருப்பூவையுலாவெனவும் வழங்கும்.

திருப்பூவணத்தலவிசேடங்களும் பிறசிவஸ்தலங்களின் விசேடங்கள் முதலியனவும், நாயன்மார்கள் மற்றச்சிவநேசர்களுடைய அருமைச்செயல்களும் பழைய தமிழ்நூல்களின் அருமைப்பிரயோகங்களும் இந்நூலில் ஆங்காங்குக் காணப்படுவதன்றி, அக்காலத்திலிருந்த சிவகங்கை அரசராகிய முத்துவடுக **நாததுரையவர்களின்** சிவநேசமும் **திருக்கண்ணதேவர், பூவணலிங்**

கம்பிள்ளை, ஈசுவர மூர்த்தியாபிள்ளை என்பவர்கள் இத்தலத்தில் இன்ன இன்ன திருப்பணிகள் செய்தார்களென்பதும் அறியலாகும்; இந்நூலில் சசு, கஎ, க00, க0ச - ஆம் கண்ணிகளைப்பார்க்க.

ஙஎ - வருடங்களுக்குமுன், மேலகரம் ஸ்ரீ திரிகூடராசப்பக் கவி ராயரவர்கள், திருநெல்வேலியில் இந்நூல் ஏட்டுப்பிரதியொன்று கொடுத்தார்கள்; ஷெ பிரதியில் முதற்பகுதியில்லை; பெதும்பைப்பருவமுதலியபாக மேயிருந்தது; நடையின் இனிமையைநோக்கி முற்றும் படித்துப்பார்க்க விரும்பி, மதுரைமுதலிய இடங்களிற் பலமுறை முயன்றும் பிரதி கிடைக்கவில்லை; அப்பால் மதுரையில், ஸேதுபதி ஹைஸ்கூலில் உபாத்தியாயராக இருந்த அரியூர், ஸ்ரீ எஸ். சாமிநாதையரவர்கள் மிக முயன்று பிரமனூர் ம-ா-ாஸ்ரீ வில்லியப்பப் பிள்ளையவர்களிடமிருந்து முழுவதுமுள்ள ஏட்டுப் பிரதியொன்றை வாங்கி அனுப்பினார்கள். இந்நூற்பரிசோதனைக்குக் கிடைத்தவை இந்த இரண்டுமே.

இந்நூலிலிருந்த சில ஐயங்களை நீக்கியவர்கள், திருப்பூவணம் பிரஹ்மஸ்ரீ வேங்கசாஸ்திரிகள் முதலியோர்கள்.

அடிமடக்குக்களிலும் சிலேடைகளிலும் பேதமில்லாமல் நகர ணகரங்களும், எதுகைகளிற் பன்மைவரவேண்டியவிடத்து ஒருமையும் ஒருமைவரவேண்டியவிடத்துப் பன்மையும் இந்நூலுட் சிலவிடத்து வந்திருக்கின்றன; மாற்றக்கூடாமையால் அவை உள்ளவாறே பதிப்பிக்கப்பட்டன.

இந்நூலுள் ஒவ்வொருகண்ணியும் நயமாக இருப்பினும் பின்னர்ச் சுட்டியவைகள் மிகப்பாராட்டற்பாலன:—

திருத்தேருடன்வருவோர் அங - கஉஅ; குழாத்தினர்கூற்று கசஉ - ருசு; பேதைவருணனை கருஅ - எச; கைத்தாய் பேதையைக்கற்பித்தல் முதலியன கஅக - கூக; திருப்பூவணநாதரைத் தெய்வப்பலாப்பழமென்று கூறும் சிலேடை ககூரு - உ0உ; ஞானசம்பந்தர் முதலியோரைக் கூறுதல் உஉச - ங0; ஸ்வாமியின் கபோலத்தழும்பைப்பாராட்டல் உஙசு - ச0; மங்கையைப் புட்பவனமென்றல் உருஉ - எ; சொல்லின்பம் உஅரு - கூங; பாண்டிநாட்டுள்ள கச - தலங்கள் உகூஅ - ஙகக; அரிவை தன் துயரைப்போக்கிக்கொள்ள முயன்றமை ஙருரு - கூ; தெரிவை, பொன்னனையாளுடைய கித்தரியமமுதலியவற்றைச் சித்திரத்தில் முறையே பார்த்து உவத்தல் ஙஎஎ - கூகூ; தெரிவை ஸ்வாமியைத்தரிசித்தலும் கூறுதலும் ச0அ - ககூ; பேரிளம்பெண் துதித்தலும், தன்னைக் கொன்றையாகக்கூறுதலும் சருஅ - சுச.

இந்நூல் முதலில் 1904 - ஆம் வருஷத்திற் பதிப்பிக்கப்பெற்றது. இப்பதிப்பில், அரும்பதவுரை முதலியன அப்பதிப்பைக் காட்டிலும் பெருக்கத்தையடைந்திருப்பதோடு படிப்பவர்களுக்கு உபயோகமாக இருத்தலைக்கருதி அவை மூலமுள்ள பக்கங்களில் அடிக்குறிப்பாக இப்போது அமைக்கப்பெற்றுள்ளன.

சென்னை<br>7-5-1923.

இங்ஙனம்,<br>வே. சாமிநாதையன்.

# நூலாசிரியர்வரலாறு.



இந்நூலாசிரியராகிய கந்தசாமிப்புலவருடைய ஊர் திருப்பூவணமே ; இது, "கவியினைப் பிழிந்துசெந்தேன் கண்டெனை வாப்ப னூர்நம், பனிமதி மிலைந்த நாதன் பன்னரும் புராணந் தன்னைப், புனிதன்மெய்க் கந்த சாமிக் கவிஞன்பூ வணத்தான் பார்மே, லினிதெனப் புலவர் கூற வின்றமிழ்ப் புணர்த்தி னானே" (திருவாப்பனூர்ப் புராணம், பாயிரம், ௩)என்பதனாலும், திருப்பூவணம் கந்தசாமிப்புலவரென்ற வழக்கத்தாலும் விளங்குகின்றது. திருப்பூவணத்திலிருந்த ஓர் உருத்திரகணிகையின் புத்திரராக இவர் கூறப்படுவர் ; இது, "திருவாலவாயர்" (௫0-ஆம்பக்கம்) என்னும் இந்நூற் சிறப்புப்பாயிரச் செய்யுளில், 'பொன்னனையாள் பெற்றெடுத்த புத்திரனோர் கந்த சாமி' எனக் கூறப்பட்டிருத்தலாலும், பொன்னனையாளை, 'எம், பொன்னனையாள்' (௫௨ - ௩ - ஆம் கண்ணி) என இவ்வுலாவில் இவரே பாடியிருத்தலாலும், கர்ணபரம்பரைக்கேள்விகளாலும் விளங்குகின்றது. இவ்வுலாவில், 'மன்போசன் முத்து வடுகநா தேந்த்ரனருள், பொன்போலு மாடை புனைந்தருளி' (௪௬)என்பதனால், இவர், சிவகங்கை அரசராகஇருந்த முத்துவடுகநாததுரையவர்களின் காலத்தவராக எண்ணப்படுகிறார். அக்காலம் சற்றேறக்குறைய * ௧௫0-வருடங்களுக்கு முற்பட்டிருக்கலாமென்று தெரிகின்றது. திருப்பூவணப்புராணம், பாயிரம், ௩-ஆம்செய்யுளிற் கூறப்பட்டிருக்குங்காலம் இற்றைக்கு ஏறக்குறைய ௩00 வருடங்களுக்கு முந்தியதாகின்றமையாலும் ஷ புராண ஏட்டுப்பிரதிகளில் அந்நூல் இவர்செய்ததாக எழுதப்படாமையாலும் செய்யுட்களின் நடைவேறுபாட்டினாலும் அந்தக்காலத்தை இவருடைய காலமாகச்சொல்லக்கூடவில்லை. இவ்வுலாவும்,திருவாப்பனூர்ப்புராணமும் இவரியற்றிய நூல்களென்று சிறப்புப்பாயிரங்களால் நிச்சயமாகத்தெரிகின்றன. புட்பவனநாதர்வண்ணமும், திருப்பூவணஸ்தலவகுப்பு தீர்த்தவகுப்பு மூர்த்திவகுப்பு என்பவைகளும், திருப்புவ'வாயிற்புராணமும் இவராற்செய்யப்பட்டனவென்று சொல்லுகின்றனர். இவரியற்றிய செய்யுட்களை ஆழ்ந்துபார்க்கையில் தேவாரமுதலியவற்றிலும் சைவபுராணங்களிலும் பழையசெய்யுட்கள் முதலியவற்றிலும் இவர் ஒழுங்கான பயிற்சியுள்ளவரென்றும் தமிழ்ப்பாஷையில் மிக்க அன்புடையவரென்றும் சிவபக்தி அடியார்பக்தி வாய்ந்தவரென்றும் தெரியவரும். மேலேகாட்டிய, "கவியினைப் பிழிந்து" என்னுஞ்செய்யுளால், இவருடையவாக்கு, அக்காலத்திலேயே இன்னவண்ணம் மதிக்கப்பெற்றுவந்ததென்பது விளங்குதலின், அதன் அருமையைப்பற்றி ஈண்டு எழுதுவது மிகையாகும்.

வெண்பா.

பூவணத்தெம் புண்ணியன்முன் பொன்னனையா ளுக்காக்கொள்
தூவணத்த பொன்மேனிச் சுந்தரன்மேற் - பாவணத்த
கந்தசா மிப்பேர்க் கவிஞனன்பிற் செய்திந்நூற்
கெந்தநூ லாகு மிணை.

---

* முத்துவடுகநாததுரையவர்களின் காலத்தை விளங்கத்தெரிந்துகொள்ளுதற்குத் தக்க சாதனம் இப்பொழுது கிடைக்கவில்லை.

உ

கணபதி துணை.

# திருப்பூவண நாதருலா.

## காப்பு.

சேவையுலாக் கொண்ட திருப்பூ வணர்மேல்வெண்
பாவையுலாம் பூவையுலாப் பாடவே - கோவைச்
சிரத்தந்தத் தந்திவண்ணன் செம்மலென வந்த
கரத்தந்தத் தந்திவண்ணன் காப்பு.

## நூல்.

க. பொன்பூத்த வுந்திப் பொலந்தா மரையாற்கு
மன்பூத்த கஞ்ச மறையவற்கு - மின்பூத்த

உ. விந்திரற்குத் தேவர்க்கு மியாவர்க்கு மாதவர்க்குஞ்
சந்திரற்குஞ் சூரியர்க்குந் தம்பிரா - னந்தமிலாப்

௩. பல்கோடி யண்டம் படைப்போன் பரிப்போனப்
பல்கோடி யண்டம் பரந்தழிப்போன் - பல்கோடி

ச. நாரணரு நான்முகரு நாளற் றழியினுந்தன்
காரண நேத்திரத்தாற் கண்டிருப்போ - னரணஞ்சொ

ரு. லெல்லாப் பொருளு மிதுபொருளென் றோர்பொருண்மே
லில்லாப் பொருளு மியானென்போ - னெல்லாநீ

---

(காப்பு) சேவை - இடபத்தை. வெண்பாவை - ஸரஸ்வதீதேவி. உலாம் - உலாவும். பூவை - திருப்பூவணம். சிரம் தந்தத்துக் கோவை அந்திவண்ணன் - சிரம் தந்தம் ஆகிய இவற்றைக்கோத்த மாலையையுடைய அந்திவண்ணன்; பரமசிவன். தந்தம் - பன்றிக்கொம்பு. கரத்து அந்தம் தந்தி - துதிக்கையால் அழகுபெற்ற விநாயகக்கடவுள்; வள் நல் காப்பு - வளவிய நல்லகாப்பாவர்.

க. உந்தித்தாமரையான் - திருமால்.

உ. தம்பிரான் - தலைவன். ௩. பரிப்போன் - காப்பவர்.

ச. சூரியன் சந்திரன் அக்கினியென்னும் முச்சுடர்களுக்கும் இறைவன் திருவிழிகள் காரணமாக இருத்தல்பற்றி, 'காரணநேத்திரம்' என்றார்.

ரு. மேல் - தமக்குமேல்.

## தலவிசேடம்.

சு. யென்னனே யாரிடத்தி லென்றுமிரான் மின்னனேயா
மென்னனே யாரிடத்தி லேயிருப்போன் - முன்ன

எ. ரிமகிரிக் கெய்திமணங் தெம்பெரு மாட்டி
யுமைதழுவச் சின்ன ளுறைந்து - சிமைபக்

அ. கயிலேமலேக் கெய்தியங்குக் காமுற் றுறைநாட்
குயிலே மலேக்கரசன் கொம்பைப் - பயில்வொரீஇ

கூ. யீசன் வெகுளவுமை யேதென்ன நீதக்க
னுசமகம் பார்க்க நடந்தநாட் - பேசியவெம்

கம. வார்த்தை யவமதித்தாய் மாதே யறிந்துசெயு
மார்த்தகொடும் பாவமீ தாகையாற் - றீர்த்தலரி

கக. தெற்குரிமை யல்லேநீ யேகுழியே கென்னவுமை
தற்குரிய நாதனிரு தாடுதிப்ப - நற்கருணே

கஉ. வள்ள றிருவாய் மலர்ந்தருளிப் பாண்டிநாட்
டுள்ளநுகர் பூவணமென் றோர்தலமுண் - டொள்ளிழையே

கங. யத்தலத்தி லல்லா லறிந்து செயும்பாவ
மெத்தலத்துந் தீராதங் கேகென்னக் - கைத்தலத்தா

கச. லீசனேப் போற்றி யெழுந்தருளித் தென்றிசையில்
வாசமலி புட்ப வனத்தெய்தித் - தேசுவளர்

கரு. செம்பொற் றருவொன்று செங்கையால் வைத்துவளர்த்
தம்பொற் றருவி னடிநீழற் - கொம்பர்

---

சு. என்ன னையார். மின்னனேயாம் என் அன்னேயார்; மின்னனேயா ரென்பது இத்தலத்தில் அம்பிகையின் திருநாமம். இங்கே ஸ்வாமியின் திருக்கோயில் அம்பிகையின் திருக்கோயிலுக்கு இடப்பக்கத்தேயுள்ளதென்பது அறிதற்பாலது.

எ. இமகிரி - இமயமலே.

அ. குயிலே - குயில்மொழிபோன்ற மொழியையுடைய உமாதேவியாரை. பயில்வு ஒரீஇ - சேர்ந்து பழகுதலினின்றும் நீங்கி.

கூ. ஏது என்ன - வெகுளுதற்குக்காரணம் யாதென்று வினவ. தக்கனுடைய மகம். நீ நடந்தநாள்.

கூ - கம. வார்த்தை - செல்லவேண்டாமென்றது. ஆர்த்த - நிரப்பிய. அறிந்துசெயும் பாவம் - ஞானகிருதம் (கங); தீர்த்தல் அரிது.

கக. எற்கு - எனக்கு. தற்கு - தனக்கு.

கங. என்ன - என்றுகட்டளேயிட. கச புட்பவனம் - திருப்பூவணம்.

கரு. செம்பொற்றரு - பாரிசாதம். கொம்பர் - உமாதேவியார்.

கசு. தெருளார் பெருந்தவமுன் செய்ய வெளிப்பட்
டருளே திருமேனி யானோன் - பிரியா

கஎ. வொருபதம் வேண்டிமணி யோடைகண்ட வெய்யோற்
கிருபதங் காட்டியரு ளீந்தோன் - பெரியசத

கஅ. பத்திர வேதனைமுன் பற்றி வருஞ்சாப
மத்திர மாக வருள்செய்தோன் - மெத்தத்

கசு. தருக்குதிர ணுசனனார் தம்மருக்க ராக
வரக்க வுருவொழித்த வம்மான் - புரக்கு

உ௦. முருமே னிவந்தமா யோனைத் தவஞ்செய்
திருமேனி தீண்டவருள் செய்தோன் - கருமேனி

உக. மாமுகவ ரர்ச்சிக்க வானோர்க்கு மேனோர்க்குந்
தாமுதன்மை யாகுந் தலையளித்தோன் - காமர்

---

கசு. தெருள் - தெளிவு.

கஎ. ஒருபதம் - துர்வாஸமுனிவருடைய சாபத்தால் நீங்கிய தன் பதவியை. மணியோடை - மணிகர்ணிகாதீர்த்தம். வெய்யோன் - சூரியன். இருபதம் - இரண்டுதிருவடிகளை ; ஒருபதம் வேண்டியவனுக்கு இருபதங்கொடுத்தருளினரென்பது மற்றொருபொருள்.

கஎ - அ. சதபத்திரம் - தாமரைமலர் ; நூறு இதழையுடையது. சாபம் - பிரமதேவர் தம் சந்நிதியில் ஊர்வசியைவிரும்பினமையால், 'இனி நீ நம்முன்னர்நிற்றற்கு உரியையல்லை' எனச் சிவபெருமான் அவருக்குக் கொடுத்தருளியசாபம். அத்திரமாக - நிலையில்லாததாக ; சாபம் அத்திரமாக - வில்லானது அஸ்திரமாகவென்பது மற்றொருபொருள்.

கசு. திரணுசனனார்-புல்லை உணவாகவுடையவர் ; இவர் ஒரு முனிவர். அருக்கராகம் - சூரியன்போன்ற செம்மைநிறம். கௌதமிநதிக் கரையிலுள்ள திரணுசனரென்னும் பிராமணரொருவர் ஸ்தலயாத்திரை செய்பவராகி இத்தலம்வந்து அம்பிகையைமட்டும் தரிசித்து ஸ்வாமியைத் தரிசியாமற்சென்ற பாவத்தால், ராக்ஷஸவடிவம்பெற்றுத் துன்புற்று நாரதமுனிவருடைய கட்டளையின்படி இத்தலத்துள்ள பிரமதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அவ்வுருவம் நீங்கப்பெற்று விதிப்படி தரிசித்து முத்திபெற்றனர்.

உ௦. உரு மேல் நிவந்த - உருவம் மேலே உயரப்பெற்ற; உலகளந்த நிலையைக்கூறியபடி. திரு மேனிதீண்ட - திருமகளின்மேனியைத்தீண்டும்படி. வாலகில்லியமுனிவர்களை அவமதித்த குற்றத்தால் திருமாலைப்பிரிந்த திருமகளார், இங்கேவந்து தவஞ்செய்து அப்பால் திருமாலால் அங்கீகரிக்கப்பெற்றனர்.

உக. மாமுகவர் - யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள்; இவருடைய திருநாமம் மணிமந்திரவிநாயகரென்பது.

உஉ. செழுந்தமிழ் மாமுனிவன் றெண்கடனீ ரெல்லா
முழுந்தமிழ்நீ ராக்க வுவந்தோன் - றெழுந்தருமன்

உங. காளிசுச் சோதிகன்மார்க் கண்டன் வசிட்டனிந்த்ரன்
வாளிமக ரன்பூசை வாஞ்சித்தோன் - றோளிற்

உச. றழைக்கும் படிகொணள சக்ரவர்த்தி முன்பட்
டுழைக்குங் கலிதீர்த் துவந்தோன் - மழைக்கு

உரு. ளொருநாட் பகுந்துண்ட வுப்பிலாக் கீரைக்
கருமாப் பதவி யளித்தோன் - விரிநீர்ச்செம்

உசு. போதத் திருவுருவாம் பொன்னனே யாட்கிரத
வாதத் திருவுருவா வந்துதித்தோன் - கோதிலறப்

உஎ. பைங்கூழ் வளர்த்த பசும்பாதி செங்கையான்
மங்கா தமைக்க வளர்ந்ததருத் - துங்கமா

உஅ. ரோருகத்தி லேதருவா யோருகத்தில் வில்லுவமா
யோருகத்தில் வன்னியா யோருகத்திற் - சீருற்ற

---

உஉ. இத்தலத்துள்ள மணிகர்ணிகா தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தவிசேடத்தால், அகத்தியமுனிவர் கடனீரையுண்டருளினர் (திருப்பூவணப். சூரியன்பூ. சுக.) தருமன் - தருமஞ்ஞனென்னும் பிராமணன்.

உங. சுச்சோதிகன் - கோதாவரிநதிக்கரைக் கண்ணதாகிய போகவதி நகரத்தரசனுன தேவவன்மாவென்னும் அரசன்புத்திரன். இவன் நாரதமுனிவர்கட்டளைப்படி இத்தலம்வந்து ஸ்வாமிதரிசனம்பண்ணி மணிகர்ணிகையில் திலதருப்பணுதிகளைச்செய்து பிதிரர்களை முத்தியடைவித்தான். வாள் - ஒளி. இமகரன்-பனியை உண்டுபண்ணுபவன்; சந்திரன். காளிமுதலியோர் இத்தலத்திற்பூசித்தோர்.

உங - ச. படி - பூமி; தோளிற்படியைத்தாங்கிய நளன். கலி - கலிபுருடனுலாகிய துன்பத்தை; "வெம்மைக் கலிதீர்த்த மேனு ணளன்றந்த, செம்மைப் பதக்கமுறாஞ் சேர்வித்து" என்பர்பின்; ருச.

உரு. இத்தலத்தில் உடலைவெறுத்து உப்பில்லாத இலைக்கறியைமாத்திரமுண்டு சிவயோகஞ் செய்துகொண்டிருந்த ஓர்அந்தணன் ஒருநாளிரவிற் பெருமழை பெய்யுங்காலத்தில் மிக்கபசியோடுவந்த ஒருபிராமணனுக்குத் தனக்குப் பாகஞ்செய்துவைத்திருந்த இலைக்கறியை அளித்து அவனையுண்பித்து அப்புண்ணியத்தால்வீடுபேற்றை யடைந்தான் (திருப்பூவணப். உமைவரு. உரு-ஙங.)

உசு. போதத்திருவுரு - ஞானவடிவம். இரத வாதம் - ரஸவாதம். திருப்பூவணநாதர், பொன்னனையாளென்னும் உருத்திர கணிகைக்கு இரும்பு முதலியவற்றைப் பொன்னுக்கித் திருவுருவங்கொண்டருளிய வரலாறு, திருவிளையாடல், இரதவாதஞ்செய்த படலத்தாலும், இந்நூல் ஙஎரு - ஆம் கண்ணிமுதலிய வற்றாலும் அறியலாகும்.

உசு - சு. அறப்பைங்கூழ் - முப்பத்திரண்டு தருமங்களாகிய செவ்விய பயிர்கள். பசும்பாதி - உமாதேவியார். உமாதேவியார் முப்பத்திரண்டு தருமங்

உகூ. பாரிற் கடவுட் பலாவாய்த் தழைக்கவதன்
வேரிற் கிளைத்தமுதல் விண்ணவர்கோ - னேரா

அடிமடக்கு.

௩0. மதித்த கயிலை வரையா னடக்க
மதித்த கயிலை வரையான் - றுதித்தார்க்கு

௩க. வாய்த்திடத்தா னீபவனத்தினு னான்மறைசொல்
வாய்த்திடத்தா னீப வனத்தினுன் - சாத்தியகை

௩௨. நந்த னிறைவிருத்த னுகத்தான் வீற்றிருந்தா
னந்த னிறைவிருத்த னுகத்தான் - முந்தரங்க

௩௩. வூரவரம் பெற்றமா யூரத்தான் கண்டோன்மீ
தூரவரம் பெற்றமா யூரத்தான் - றேரிற்

---

களையும் வளர்த்தருளினமையின், 'கோதிலறப் பைங்கூழ்வளர்த்த பசும்பாதி' என்றார்; இதனைக் காஞ்சிப்புராணம், முதற்காண்டம், தழுவக்குழைந்தபடலம்,கசுஎ-ஆம் செய்யுள் முதலியவற்றாலும், ஷை புராணம், உ-ஆம் காண்டம், கழுவாய்ப்படலம், உ௩அ-ஆம் செய்யுள் முதலியவற்றாலுமுணர்க. தருவென்னும் எழுவாய் 'தழைக்க' (உகூ) என்பதைக்கொள்ளும். பயிரைவளர்த்தோர் தருவையும் வளர்த்தற்குரியரென்றபடி. முதல் - முதற்பொருள். உமாதேவியாருடைய திருக்கரத்தால் வைக்கப்பெற்ற விருக்ஷம் கிருதயுகமுதலிய நான்கிலும் முறையே பாரிசாதம், வில்வம், வன்னி, பலாவாக ஆயிற்றென்பதை "முதுசுவை தருமா ரமுதவிர் துவிற்றுன், முளைத்திடுஞ் சுரர்தரு வொன்று, ...திபெறு கிரேதா யுகமது முன்னுச்சொற்றகு நான்குகந்தொறுமிப், பதிதனிற் பாரி சாதமாலூரம் பன்னரு முயர்புகழ் வன்னி, திதமுறுசெம்பொற் சுளைக்குடக் கனிசேர் தீம்பலா வாகியே திகழும்" (திருப்பூவணப். சிதம்பரவுப. க௨) என்பதனாலுமுணர்க.

உகூ - ௩0. நேரா - உடன்படாத. மதித்தகை இல் யான் ஐவரைஅடக்க மதித்த - புத்திகூர்மையில்லாதயான் ஐம்பொறிகளாகிய துஷ்டரை அடக்கும்படி திருவுளம்பற்றின.

௩க. வாய்த்திடத் தான் ஈ பவனத்தினுன் - வாய்த்திடும்படி தான் ஈயும் பவனத்தினுன்;, பவனம் - தேவருலகம். நான்மறை சொல்வாய்த்திடத்தான் - நான்குவேதங்களையும்சொல்லும் வாய்வன்மையையுடையவர். நீபவனம் - கடம்பவனம்; மதுரை.

௩க - ௨. கைசாத்திய நந்தன் இறை விருத்தனுக - கையில் சங்கத்தை யணிந்த திருமால் பிரமதேவருடைய விரோதியாக; விருத்தம் வடமொழி. இறை - பிரமதேவர். வீற்றிருத்தல் - கவலையின்றியிருத்தல். நந்தல்நிறை- பெருகுதல் நிறைந்த. விருத்த நாகம் - விருத்தாசலம்; பழமலை.

௩௨ - ௩. முந்து அரங்க ஊரவர் அம் பெற்றமாய் ஊரத் தான் கண்டோன் - முன்பு திருவரங்கத்தையுடையவராகிய திருமால், அழகிய இடபமாய்வரும்வண்ணம் தாம் செய்தருளியவர். மீது ஊர வரம்பெற்ற மாயூரத்

நசு. படங்கொண்ட வல்குற் பராபரைமின் னம்மை
யிடங்கொண் டுறைபூவ ணேச - னடங்கொண்டு

நரு. சேவிக்குந் தெய்வத் திருப்பங் குனித்திருநாண்
மேவப் பெருமகிழ்ச்சி மீதூரக் - காவற்

நசு. குருமணிவெள் ளேற்றுக் கொடியேற்றி வீதித்
திருவுலாப் போதுந் தினத்து - வொருநாட்

நஎ. சகங்காட்டுங் கங்கு றணிய வருணன்
முகங்காட்டச் சங்க முழங்கச் - சுகங்காட்டும்

நஅ. பொன்மலை வல்லியுடன் பூண்ட திருத்துயினீத்
தென்மலை வில்லி யெழுந்தருளி - நன்மைப்

நகூ. பருவயிர மாணிக்கப் பல்லக்கின் மீது
திருவனந்தற் றெய்வவுலாச் சென்று - பெரிதிருந்து

சo. தேறத் தகும்பெரிய திவ்யா கமப்படியே
கூறத் தகும்பூசை கொண்டதற்பின் - மாறற்ற

சக. நீணித் திலத்தரள நீல ப்ரவாளவச்ர
மாணிக்கச் சித்ரரத்ன மண்டபத்திற் - பேணிக்கொ

சஉ. டங்காத ஞயகியுந் தாமு மெழுந்தருளிச்
சிங்கா தனத்தவிசிற் சென்றிருந்து - நங்கூட

---

தான் - தன்னை அடைந்தோர் மேலாகும்படி விசேடம்பெற்ற திருமயிலாடுதுறை யென்னும் ஸ்தலத்தை யுடையவர்.

நசு. மின்னம்மை - அம்பிகையின் திருநாமம். நடங்கொள்ளல் சேவிப் போருடைய தொழில்.

நரு. பங்குனியுத்தரத்தில் தீர்த்தம்.

நரு-சு. காவல் - காத்தல்; வெள்ளேறு - இடபம்; திருமாலாகிய வெள் ளேறு. ஒருநாள் - ஒன்பதாந்திருநாள்.

நஎ. சகங்காட்டும் கங்குல் - உலகில் தோன்றும் இருள். அருணன்- சூரியன்; அவனுடைய தேர்ப்பாகனுமாம்.

நஅ. எல் மலை வில்லி - ஒளியையுடைய மேருமலையாகிய வில்லையுடைய வர்.

நகூ. திருவனந்தல் - விடியற்காலத்தில் நடைபெறுந் தரிசனவிசேடம். தெய்வஉலா - அக்காலத்தில் ஸ்வாமி திருப்பள்ளியறையினின்றும் எழுந் தருளுதல்.

சo. திவ்யம் - தெய்வத்தன்மை.

சக. நித்திலத்தரளம் - இருபெயரொட்டு. ப்ரவாளம் - பவளம்.

சஉ. 'தம்' ஒருமையிற் பன்மை வந்தவழுவமைதி; இதுபோன்ற பிரயோ கத்தை இந்நூலிற் பல இடத்துங்காணலாம். தவிசு - மெத்தைமுதலியன.

சங. ஊரிற்குண் டோதரற்கா வூட்டத் தனிபிரிந்து
பாரிற்செல் வையைப் பகீரதிப்பெண் - பேர்வுற்ற

சச. நீட்சிப் பிரிவொழிய நேடி மணப்பதெனக்
காட்சித் திருவபிடே கங்கொண்டு - மாட்சி

சரு. யலங்கார மாக்கொளத ளாடை யிரண்டும்
விலங்காடை யென்ன விலக்கி - நலங்காணு

சசு. மன்போசன் முத்து வடுகநா தேந்த்ரனருள்
பொன்போலு மாடை புனைந்தருளித் - தன்போற்

சஎ. றிகழ்ந்திடுங்க ணன்றித் திருமுடியுந் திங்கள்
புகுஞ்செல்வங் கண்டு பொருன்போன் - மிகுங்கதிர்சூழ்

சஅ. செம்பருதி தானுமொக்கச் சேர்ந்து சுடர்வதென
வம்பொன் மணிமகுட மாங்கமைத்து - விம்ப

சகூ. நணிமகர மண்டலமா நன்முகத்திற் கேற்ப
மணிமகர குண்டலங்கள் வைத்துத் - திணிகொண்

**திருச்சாந்தணிதல்**

ருo. மணிகண்ட னென்னும்பேர் மற்றிதனு லென்ன
வணிமணிக் கண்டிகண்டத் தார்த்துக் - கணிதிருச்சாந்

---

சஉ - ங. கூடலாகிய ஊர்-மதுரை. வையைநதிப்பெண்-கங்கை; வையையாகிய பகீரதிப்பெண்ணெனக. குண்டோதரனுக்குண்டாகிய பெருந்தாகத்தைத் தீர்த்தற்பொருட்டு ஸ்ரீசோமசுந்தரக் கடவுள் கங்கையைத் தமது திருமுடியினின்றும் பூமியிற்பெருகச் செய்தாரென்பதும் அதுவே வையைநதியாயிற்றென்பதும் பழையவரலாறு (திருவிளை. அன்னக்குழியும்.)

சரு. அதள் ஆடை இரண்டு - புலித்தோலும் யானைத்தோலும். விலங்காடை - மிருகங்களின் தோலாகிய ஆடை ; விலகுதற்குரிய ஆடை.

சசு. மன் போசன் - புகழால் உலகில் நிலைபெற்ற போசராசன் போல்வானாகிய; போசன் - வடக்கேயுள்ள தாராநகரத்தில் இற்றைக்கு கஉoo - வருடங்களுக்கு முன்னேயிருந்து அரசுபுரிந்தவனும் பெருங்கொடையாளியும் ஸ்ரீ காளிதாஸன் முதலிய பண்டிதர்களை ஆதரித்து வடமொழியை வளர்த்தவனுமாகிய ஓரரசன்; முத்துவடுகநாதேந்திரன் - முத்துவடுகநாததுரை; இவர் சிவகங்கையிலிருந்த அரசர்களில் ஒருவர்; மருதபாண்டியரென்னும்பிரபுவின் காலத்திற்கு முன்பிருந்தவர். 'தன்' என்றது, சூரியனை.

சஎ. முகக்கண்கள் - சந்திரனும் சூரியனுமென்பது அறியற்பாலது.

சஅ. பருதி - சூரியன். விம்பம் - ஒளி.

சகூ. நண் இமகர மண்டலமாம்-பொருந்திய சந்திரமண்டலத்தை ஒத்த.

ருo. மணிகண்டன் - நீலகண்டர்; இரத்தினத்தையணிந்த கண்டரென்பது மற்றொருபொருள். கணித்தல் - மதித்தல். திருச்சாந்து, கிருஷ்ணகந்தமென்று வழங்கப்படும்.

ருக. தாகம்பவளா சலமென் றவிர்சடைவாழ்
மேகம் படிந்த விதமென்ன - மோக

ருஉ. முதிர முதிர முழுதுடம்புந் தேவிக்
கெதிரி லவனீந்த தென்ன - மதிநுதலெம்

ருங. பொன்னனை யாட்களித்த போதிரத வாதத்து
மன்னுபுகை மேற்பரந்த வண்ணமென - மின்னுறவே

ருச. வெம்மைக் கலிதீர்த்த மேனு ணளன்றந்த
செம்மைப் பதக்கமுரஞ் சேர்வித்துத் - தம்மைத்

ருரு. திருவரைக்கோ மாட்டி தினந்தழுவுங் கைபோன்
மரகதக்கே யூரம் வளைத்துப் - பருநன்

ருசு. மணிக்கைவளை யென்ன வரும்பேர்க் கிசைய
மணிக்கை வளைகரத்தில் வைத்துத் - துணைக்கமலப்

ருஎ. பூவிற் கருகுதிக்கும் பூங்கதிர்போ லுமெல்லாஞ்
சேவிக்க ரத்னச் சிலம்பணிந்து - மேவுற்ற

ருஅ. தம்பொற் சடைக்கிடக்குந் தண்கார்மின் னிட்டனைய
செம்பொற் றிருவா சிகைசேர்த்தி - யெம்பிரான்

ருகூ. மேன்மை வடிவமுடி மேற்பெண் டியானிக்கும்
பான்மையெனக் கண்ணாடி பார்த்தருளி - நான்மறைநூ

சுo. லோர்ந்தமறை யோர்செ யுபசார மீரெட்டிற்
சார்ந்ததிரு வாரா தனைகொண்டு - தேர்ந்தங்

---

ருக. "தம்பொற் சடைக்கிடக்குந் தண்கார்" என்பர் பின்னும் (ருஅ); "பிறையிட்ட திருச்சடையிற் பெயலுன்கும் வரவிடுத்தான்" (திருவிளை. வருணன்விட்ட. கஎ) என்பதனாலுமுணர்க.

ருஉ. முழுதுடம்பும் - உடம்புமுழுவதும். எதிரில்லவன்-சிவபெருமான்.

ருo - ருங. திருச்சாந்து மின்னுறவென்க. இவ்வடிகளால் திருச்சாந்தணிதல் கூறப்பட்டது; "திருச்சாந் திலேபனமுஞ் செய்து" (தேவையுலா, அச.)

ருச. "நள சக்ரவர்த்தி முன்பட் டுழைக்குங் கலிதீர்த் துவந்தோன்" என்றார் முன்னும் (உச); நளபதக்கமென வழங்கும் மூன்று பதக்கங்கள் இன்றும் இத்திருக் கோயிலில் உள்ளன.

ருரு. கேயூரம் - வாகுவலயம்; தோள்வளை.

ருசு. கைவளை - சிறுவளை. துணை - இரண்டு.

ருஎ. அருகு - சமீபம். சூரியன் இரத்தினச்சிலம்பிற்கு உவமம்.

ருஅ. சிவபெருமானுடைய சடையில் மேகம்கிடத்தல், இந்நூல் ருக-ஆம் கண்ணியின் குறிப்பாலுணரலாகும்.

ருகூ. முடிமேற்பெண் - கங்கை. கண்ணாடிக்குக் கங்கை உவமம்.

சுo. உபசாரம் ஈரெட்டு - ஷோடசோபசாரம்.

௬௧. கெழுதாச் சுருதி யெழுதுஞ் சுருதி
செழுமாத் திருச்செவியுட் சேர்த்திக் - குழுமித்

௬௨. தருமோசை தேவர் சயசய வென்ன
வருமோசை மாமுனிவ ரோசை - யிருவர்

௬௩. நரம்போசை தெய்வநந்தி நம்பிரான் செங்கைப்
பிரம்போசை யோடும் பிறங்க - விரும்போசைச்

௬௪. சீர்மணிப்பொற் கோயிற் றிருப்பேர் சுமந்தருள
வார்மணிப்பொற் றண்டின் மகிழ்ந்தேறி - நீர்மை

௬௫. யுணர்வரும்பஃ றேவ ரொதுங்க வடியார்
கணநெருங்கும் வாயில் கடந்து - மணநெருங்குந்

௬௬. தென்ற னடந்தினிது சேவிப்பத் தென்பாண்டி
யின்றமிழ்நா டுய்ய வெழுந்தருளிக் - கொன்றையளி

௬௭. பாடுஞ் சடைக்கணிந்த பாகீ ரதிக்கேறி
யாடும் படிபறக்கு மன்னமெ்ன - மாடிரட்டு

௬௮. நீடு கவரி நிரை துள்ள மாமணித்தே
ரூடு கவுரி யுடனேறிச் - சூடியதன்

௬௯. பிள்ளைமதி பார்க்கப் பெருமதிவந் தென்னநிலாக்
கொள்ள வுயர்வெண் குடையோங்க - விள்ளுங்

---

௬௧. எழுதாச்சுருதி - வேதம். எழுதுஞ்சுருதி - தேவாரமுதலியவைகள்; "எழுதா மறையு மெழுது மறையும், வழுவாது கேட்டு மகிழ்ந்து" திருவிடை. ௧௧௭.

௬௨. இருவர் - தும்புருநாரதர்; "எள்ளி லிருவ ரியாழ் முரல" ௧௦௭.

௬௩. விரும்பப்படும் ஓசையையுடைய.

௬௪. திருப்பேர் - சிவகைங்கரியஞ் செய்பவர். தண்டு - திருவாடுதண்டு; 'திருவாடு தண்டினு மேற்செல்ல' என்பர் பின்னும்; ௮௯.

௬௫. பஃறேவர் - பல தேவர்.

௬௭. பாகீரதி - கங்கை. மாடு இரட்டும் - பக்கத்தில் மாறிஅசையும்.

௬௭ - ௮. சாமரைக்கு அன்னம் உவமை; அன்னப்பறவை ஆகாயகங்கையை விரும்பும்.

௬௮ - ௯. "பிள்ளை மதியினைமுன் பெற்றெடுத்த தாய்மதிபோல், வெள்ளை மதிக்கவிகை மேனிழற்ற" (திருவேங்கை. ௯௪); "எரியவிர்ந் தனைய துவர்மணிச் சடிலத் தெறிதிரைக் கங்கையூ டலைந்து, பருவருங் கேண்மைச் சிறுபிறைக் கிரங்கிப் பற்றித்த னிருக்கையிற் கொடுபோய்த், தெருமரா தளிப்பான் முழுமதி யணுகிச் செவ்விபார்த் துறைவது மானும், விரிகதிர்த் தாளத் தொங்கல்சூழ் வட்ட வெண்குடை மீமிசைநிழற்ற" காஞ்சிப். தலவிசேட. ௫.

எ௦. கொடைக்கடவு ணல்லான் குழாம்புக்கு விண்ணின்
விடைக்கொடிநின் ருங்கு விளங்கச் - சுடர்க்கடவுள்

எக. பன்னிருவ ரல்லர்மதி பார்த்திடினே யொன்றன்று
னுன்னி னநேக ருளரென்ன - மின்னுகதிர்க்

எ௨. கோலநிறை ரத்னக் குடையும் பருமுத்தின்
சீல மணிக்குடையுஞ் சேணிழற்ற - மேலே

எ௩. வினைப்பகையார் வம்மின் வினைக்குரியார் போமி
னெனப்பீலி யாடி யிலங்கப் - பனைக்கைமுகன்

எ௪. மூடிகத் தேரேறி முன்னடப்பச் சேய்கலவ
நாடகத்தே ரேறி நடந்தருள - வூடணையு

எ௫. மன்னத்தே ரேறி யயன்மா திருக்கருட
வன்னத்தே ரேறி மருங்குவரப் - பொன்னொத்த

எ௬. வாதித்த ராறிருவ ராறிரண் டேழ்புரவிச்
சோதிப்பொற் றேரேறிச் சூழ்போதக் - கோதற்ற

எஎ. சீதக் கதிர்முத்தின் றேர்மீதிற் புட்பகத்தேர்
மீதிற் பெருந்தோழன் மேவிவரத் - தீதற்று

எஅ. வந்தணையும் வெள்ளை மதவயி ராவதத்தே
ரிந்திர னேறி யினிதெய்தச் - செந்தழலோ

---

எ௦. கொடைக் கடவுள் நல் ஆன்குழாம் - கொடுத்தலையுடைய காமதேனு வின்சாதியாகிய தெய்வப்பசுவின் கூட்டத்தில். புக்கு ஆங்குநின்று விளங்க.

எக. மதியும் பலவுண்டு. எ௨. சீலம் - நல்ல இலக்கணம்.

எ௩. பீலி - மயிலிறகாற்செய்த சிற்றாலவட்டம் ; "கடைந்துபெய் மணிக்கைச் செம்பொற் காசறு தகட்டிற் சூழ்ந்து, மிடைந்துபெய் மணிக்கட் பீலி மின்னுசாந் தாற்றி" (சீவக. அ௩௯.) பனைக்கைமுகன் - விநாயகக்கடவுள்.

எ௪. மூடிகத் தேர் - பெருச்சாளியாகிய வாகனம்; தேரென்பது ஊர்திகளின் பொதுப்பெயராகவும்வழங்கும்; "அன்னத்தே ரேறி யயன்வலப்பாற் கைபோத" என்பது ஆதியுலா. சேய் - முருகக்கடவுள். கலவம் - கலாவம்; மயிலின் றோகை; கலவநாடகத்தேர் - மயிலாகிய ஊர்தி.

எ௫. "அன்னத் தேரின னயன்வலப் பாங்கரு மராவலி க்வர்சேன, வன்னத் தேரினன் மாலிடப் பாங்கரு மலர்க்கரங் குவித்தேத்த" திருவிளை. ௫: ௧௧௩.

எ௬. ஆறிரண்டு தேரென்க.

எஎ. சீதக்கதிர் - சந்திரன். முத்தின்தேர் - முத்துவிமானம். புட்பகத் தேர் - புட்பகவிமானம். பெருந் தோழன் - குபேரன்.

எகூ. னீதி மறலி நிருதிவரு ணன்பவன
ஞதியீ சான னடலூர்தி - மீதுவரக்

அ௦. கூறும் பதினொருவர் கூறருஞ்சாத் தன்வடுகெ
னேறும்பன் ஞாளி யினிற்போத - மாறின்றி

அக. யேழ்முனிவ ரெண்ம ரிருவ ரொருதனித்தந்
தாழ்வில் விமானந் தமிற்செல்லச் - சூழியக்கர்

அ௨. கந்தருவர் சித்தர் கருடர் சுரருரகர்
வெந்திறற் கின்னரர்சே வித்துவரத் - தந்தைதாய்

அ௩. வேணு புரக்கோலம் வீழி மிழலையிடைப்
பேணும் வகைபார்த்த பிள்ளையும் - பூணுமருண்

அ௪. மெய்யாக் கயிலைமலை வீற்றிருந்த தன்கோல
மையாற்றிற் கண்டருளென் னப்பனு - மெய்யாம

அ௫. லாடிச் சிவக்கு மடியைத்தென் ஞரூரிற்
பாடிச் சிவப்பேற்றும் பாவலனுங் - கூடற்கு

அ௬. ளாசில் வழுதி யரசற்குச் சம்புவால்
வாசி வரவழைத்த மந்திரியும் - வீசுதிரை

அஎ. சேர்க்குங் கடற்புவிக்குட் டெய்வச் சிவலோகம்
பார்க்க வரவழைத்த பார்த்திவனு - நீர்க்குடிலப்

---

எகூ. பவனன் - வாயுதேவன். ஆதியாகிய ஈசானன்.

அ௦. ஏறு - இடபம். உம்பல் - யானை. பதினொருருத்திரர் ஏறுகளிலும், ஐயனர் யானையிலும், வைரவக்கடவுள் ஞாளியின்மீதும் போத; ஞாளி - நாய்.

அக. எண்மர் - அஷ்டவசுக்கள். இருவர் - மருத்துவர்.

அ௨ - ௩. தந்தைதாய் - சிவபெருமானும் உமாதேவியாரும். வேணுபுரம் - சீகாழி. பிள்ளை - திருஞானசம்பந்தமூர்த்திநாயனர். இவர், சீகாழியில் திருத்தோணியின்மீதுள்ள உமா மகேசத் திருக்கோலத்தைத் திருவீழி மிழலையில் தரிசித்தனர். இதனை, "மைம்மருபூங்குழல்" என்னும் தேவாரத்தாலும் "சண்பைத் திருமறை யோர்க ளெல்லாம்" (திருஞான. ௫௫௨) என்னும் **பெரியபுராணத்**திருவிருத்த முதலியவற்றாலுமுணர்க.

அ௪. அப்பன் - திருநாவுக்கரசுநாயனர். எய்யாமல் - இளையாமல்.

அ௫. அடியைச் சிவப்பேற்றியது - பரவையாருடைய திருமனைக்கு இறைவனைத் தூதுபோகும்படி செய்தது. பாவலன் - சுந்தரமூர்த்திநாயனர்.

அ௬. சம்பு - பரமசிவன், நரி. வாசி - குதிரை. மந்திரி - மாணிக்கவாசகர்.

அஎ. பார்த்திவன் - வரகுணபாண்டியர். குடிலம் - சடை. சிவலோகம் வருவித்ததை, திருவிளையாடலில், வரகுணனுக்குச் சிவலோகங் காட்டியபடலத்தாலுணர்க.

அஅ. பொன்முடிக்கு ளன்றிப் புனையாத் திருக்கொன்றை
தன்முடிக்குள் வாங்கித் தரிப்போனு - நன்மை

அகூ. யொருவாத தத்தமணி யூர்தியினுஞ் சேமத்
திருவாடு தண்டினுமேற் செல்லப் - பிரியாத

கூ0. வெப்பற்றுந் தீர்நாற்பத் தெண்ணு யிரவரெனு
மொப்பற்ற வேடத் துயர்ந்தோரு - மெய்ப்புற்ற

கூக. சுந்தரன் பாடுதிருத் தொண்டத் தொகைக்குளொன்பான்
வந்த திருக்கூட்ட மாதவருஞ் - சந்ததமு

கூஉ. நாவகத்து மார்பகத்து நற்றிருமுன் னூல்கிடக்கும்
பாவகத்த ராம்வேத பாரகரும் - பூவணவன்

கூங. றெய்வத் திருமேனி தீண்டத் தகைம்பெற்ற
சைவப் பெருமறையோர் தங்கிளையு - முய்விப்போன்

கூச. கண்ணகன் கோயிற் கயிங்கரியஞ் செய்வோரும்
பண்ணமர்பாட் டோதும் பரிசனமு - மெண்ணிறந்த

கூரு. தீர்க்கத் தபோதனருஞ் சேவிப்போ ருஞ்சைவ
மார்க்கப் பதினெண் மடத்தாரு - மேற்கனிறை

---

அஅ. தரிப்போன் - தண்டீசர் ; "அங்கரவத் திருவடிக்காட் பிழைப்பத் தந்தை யந்தணனை யறவெறிந்தார்க் கருளப்போதே, கொங்கரவச் சடைக்கொன்றை கொடுத்தார் போலுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெம் கூத்த னாரே" (தே.)

கூ0. நாற்பத்தெண்ணுயிரவர்-நாற்பத்தெண்ணுயிரமுனிவர் ;. இது குழூஉப் பெயர் ; "எண்ணுமொருநாற்பத் தெண்ணு யிரவரெனும், புண்ணிய வேடப் புனிதரும்" என்பது ஏகாம்பரநாதருலா, கூசு. மெய்ப்பு - புகழப்படுதல்.

கூக. ஒன்பான் கூட்ட மாதவர் - தில்லைவாழந்தணர், பொய்யடிமையில்லாதபுலவர், பத்தராய்ப் பணிவார், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார், திருவாரூர்ப்பிறந்தார், முப்பொழுதும் திருமேனிதீண்டுவார், முழுநீறுபூசிய முனிவர், அப்பாலும் அடிச்சார்ந்தார்.

கூஉ. முன்னூல் (=முந்நூல்) - பழைய நூலாகிய வேதம்;முப்புரியாகிய பூணூல். பாவகம் - தியானம். பாரகர் - கரைகண்டவர்; வைதிகப்பிராமணர்.

கூங. ஆதிசைவப்பிராமணர். உய்விப்போன் - சிவபெருமானுடைய.

கூச. பண் அமர் பாட்டு - தேவாரம். ஓதும் பரிசனம் - ஓதுவார்கள்.

கூரு. தீர்க்கத்தபோதனரில், எதுகைபற்றி வல்லொற்று மிக்கது. பதினெண்மடத்தார் - சிவாகமபத்ததிகள் பதினெட்டையும் இயற்றிய ஆசாரியர்கள் பதினெண்மர்களுடைய பரம்பரையினர். அப்பதினெண்மர்களாவார்: துர்வாஸசிவர், பைங்களசிவர், உக்கிர ஜ்யோதி, ஸ்ரீகண்டர், விஷ்ணு கண்டர், ஸ்-ம்போதர், வித்தியா கண்டர், இராமகண்டர், ஞானசிவர், ஞானசங்கரர், ஸோமசம்பு, பிரஹ்மசம்பு, அகோரசிவர், வருணசிவர், திரிலோசன சிவர்,

கூகூ. யண்டர் பணியு மழகிய நாயகர்முன்
மண்டபஞ்ச பாபதி மண்டபமுங் - கண்டருளிச்

கூஎ. சித்தங் களிகூர் திருக்கண்ண ராசேந்த்ர
வுத்துங்க னுங்குலத்தி லுள்ளோரு - மத்தற்

கூஅ. கமைக்குங் கொடிக்கம்ப மண்டபமு மம்பொ
னிமைக்கத் திருமுன் னியற்றி - யுமைக்கு

கூகூ. முரசதிர் கோயின் முதற்பிர காரத்
திருமதிலு மண்டபமுஞ் செய்வித் - தொருதன்

கoo. வரிசைப்பேர் கொள்பூ வணலிங்க மென்னு
முரிமைப்பேரான் சுற்றத்தோரும் - பெரியமணி

கoக. கன்னிகைத் தீர்த்தக் கரைமதிலு மண்டபமு
மன்னுபுடை சுற்றுமாள் வாரியுடன் - முன்னிமுடித்

---

பிரஸாதசிவர், இராமநாதசிவர், ஈசானசிவரென்பவர்கள் ; "பதினெண் மடத்திற் பயிலு - முதலிகளும்" என்பது திருவானைக்காவுலா; "வெண்ணீற்று, வண்டற் பதினெண் மடத்தாரும்" என்பது திருக்காளத்திநாதருலா, கசுச.

கூகூ. அழகிய நாயகர் - பொன்னனையார் செம்பொன்னால் இயற்றுவித்த மூர்த்தி; "பணிபவ ளழகு கண்டே பரவுமெம் பெருமா னுக்கிங், கணிபொலி வடிவ மச்சோ வழகிய வாவென் றன்பி, னிணையிலா வருங்க போலத் திருகை யான் மாறி யள்ளித், தணிவற முத்த முண்டாள் சம்புவி னருளை வாழ்த்தி," "மணமலி பெருமாற்கச்சோ வழகிய தெனலான் மண்மீ, தணிதிரு நாம நின்ற தழகிய பெருமானென்றே, யுணர்வுளா ளுளுஞ் சித்தர் சித்தரென் றெழியா ளாகி, யிணையிலா வடிவத்தோடு மேகினள் சிவலோ கத்து" (திருவாலவாய். ௨ரு: கரு, கஎ); "மழவிடை யுடையான் மேனி வனப்பினை நோக்கி யச்சோ, வழகிய பிரானே வென்ன வள்ளிமுத் தங்கொண் டன்பிற், பழகிய பரனை யாளுப் பரிவினுற் பதிட்டை செய்து, விழவுதேர் நடத்திச் சின்னாள் கழிந்தபின் வீடு பெற்றாள்" திருவிளை. நகூ: உகூ.

கூஎ. திருக்கண்ண ராசேந்த்ர உத்துங்கன் - திருக்கண்ணதேவர்; இவர் சிவகங்கை அரசர்களுடைய உறவினர். இவருடைய பரம்பரையோர் இக்காலத்துத் திருப்பூவணத்தைச்சார்ந்த பிரமனூரிலிருக்கின்றனர்; உத்துங்கன் - உயர்ந்தவன்.

கூகூ - கoo. தன் வரிசைப்பேர் - பூவணலிங்கமென்பது; 'தன்' என்றது சிவபெருமானை. பூவணலிங்கமென்னுமுரிமைப்பேரான் - பூவணலிங்கம்பிள்ளை யென்பவர்; இவருடைய வழித்தோன்றலாகிய மருதநாயகம் பிள்ளையென்பவர் இப்பொழுது மதுரையிலிருக்கின்றனரென்பர்.

கoக. ஆள்வாரி - ஆளோடி.

கoஉ. தூறுசீர்ப் புண்ணியநீர்க் குள்ளிறங்கி ஸ்னானஞ்செய்
தேறுவார் சொர்க்கத் திருகால்வைத் - தேறப்

கoஙு. படிகட்டி யன்ன படிகட்டி நாளும்
வடிகட் டியதருமம் வாய்த்தோன் - முடிகட்டுங்

கoச. துன்னு நதிமரபிற் றோன்றீ சுரமூர்த்தி
யென்னு மவனு மியல்கிளையு - மின்னுங்

கoரு. கருத்தொன்றி வந்துசிவ காரியங்கள் செய்யுந்
திருத்தொண்டர் தங்க ளடியாரு - நிருத்தஞ்செய்

கoசு. செம்பொனிதழ்க் கும்பமுலைச் சேனயனப் பால்வயனத்
தம்பொனிறத் தேவ ரடியாரும் - பம்புதிரை

கoஎ. வெள்ள மெனத்திரண்டு வீதிக் கரைபுரள
வெள்ளி லிருவ ரியாழ்முரலத் - துள்ளுகணப்

கoஅ. பானுகம்பன் சங்கம் பரிந்தூத வாணன்கார்
மானுங் குடமுழவம் வாசிப்ப - வானுயர்

கoகூ. மெய்யஞ் செழுத்தால் விரவுங் குழலோசை
யையன் செவிக்கின் னமுதூற்றப் - பொய்யன்பில்

---

கoஉ. ஊறுசீர் - ஊறுகின்ற இயல்பையுடைய. ஸ்னானம் - ஸ்நானம்.
கoஙு. வடிகட்டிய - ஆராய்ந்தெடுத்த.

கoச. நதிமரபு - கங்காகுலம். ஈசுரமூர்த்தி - ஈசுவரமூர்த்தியா பிள்ளை யென்பவர்; திருப்பூவணத்திற்கு மேற்கே ஒன்றரைநாழிகைவழித்தூரத்திற் சாலையில் ஈசுவரமூர்த்தியா பிள்ளைமடமென்று ஒரு பழையகட்டிடமிருந்துசில வருடங்களுக்குமுன்பு இடிந்துபோயிற்றென்பர். இவருடைய பரம்பரையோர் திருப்பூவணத்திலே இருக்கின்றனர். கிளை - சுற்றம்.

கoசு. வயனம் = வசனம் - சொல்; "நால் வயனத்தவ" என்பர்; திருவிளை. உச: உஎ.

கoஎ. இருவர் : சுஉ.

கoஅ. பானுகம்பன் - சிவகணத் தலைவர்களிலொருவன். வாணன்-வாணாசுரன். பானுகம்பனுக்கு வாய்கள் ஆயிரம்; வாணாசுரனுக்குக் கைகள் ஆயிரம் (திருவிளை. ரு: கoச - பார்க்க.) "பெய்யு மாமழை முகிலெனப் பெரியவாய் முழவர், துய்ய மாமதி யனையவெண் சுரிமுகச் சங்கம்,ஐயவாணனும் பானுகம் பப்பெய ரவனுங், கையும் வாயுமொத்ததிர்த்தனர் செவிகரங்கவிழ்ப்ப," (பிரபு லிங்க. கைலாய. சரு); "தொள்ளை வளை, யொன்று யிரம்வா யொலிக்கு மவைபோன்று, சென்று யிரமெண் டிசைவிழுங்கக் - குன்றாத், திரண்டா யிரங் கை தெழிக்குமது போற்கை, யிரண்டான் முழவொன் றிரங்க"(திருவெங்கை. கூச - சு.) ஆனுயர் - ஆனாயநாயனர்.

கoகூ. அஞ்செழுத்தால் - பஞ்சாக்கரத்தோடு;பெரிய. ஆனாய. உஉ, உகூ.

கக௦. சம்பந்தர் கைத்தாளந் தாக்கிட நீலகண்டப்
வெம்பெரும் பாண ரிசைகூட்டப் - பைம்பொன்

கக௧. முருடு தடாரிதக்கை மொந்தை பதலை
யிரலை திமிலைமுர சேங்கத் - திரையெறியும்

கக௨. வையை நதித்தீரன் வந்தான் மணிகுண்டச்
செய்யநெடுந் தீர்த்தச் சிவன்வந்தான் - றுய்ய

கக௩. நலஞ்செய் நவக்கிரக நாட்களிவை நாளும்
வலஞ்செய்யு மூருடையான் வந்தான் - பொலஞ்செய்ய

கக௪. பொன்பதும மானனைய பொன்னனை யாண்மனைக்கு
ளன்பமுது கொண்டவரன் வந்தான் - முன்பிரத

கக௫. வாதஞ் செயுஞ்சித்தன் வந்தான் மதிக்குடைவேள்
போதஞ் செயும்போர் பொருன்வந்தான் - மோதுவிடந்

கக௬. தண்கழுத்தில் வைத்துநெடுந் தாலிசெழுந் தாமரையின்
பெண்கழுத்தில் வைத்த பிரான்வந்தா - னெண்கழிக்குந்

கக௭. துங்க வமரர் தொழும்பா வணங்கொடுக்குஞ்
செங்கம லச்சரணத் தேவந்தா - னெங்கள்

---

கக௦. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருக்கோலக்காவிற் பொற்றாளம்பெற்று ஒத்தறுத்துப்பாடியவராதலின், இங்ஙனங்கூறப்பெற்றனர்; "கையதனு லொத்தறுத்துப் பாடுதலுங் கண்டருளிக் கருணைகூர்ந்த, செய்யசடை வானவர்த மஞ்செழுத்து மெழுதியசெம் பொற்றாளங்கள், ஐயரவர்திருவருளா லெடுத்தபா டலுக்கிசைந்த வளவா லொத்த, வையமெலா முய்யவரு மறைச்சிறுவர் கைத்தலத்து வந்த வன்றே" (பெரிய. திருஞான. ௧௦௩ - அ) என்பதனுலுணர்க. திருநீலகண்ட யாழ்ப்பாணர்.

கக௨. மணிகுண்ட நெடுந்தீர்த்தம் - மணிகர்ணிகாதீர்த்தம். 'செய்ய நெடுந்தீரச்சிவன்' என்றும் பாடம்.

கக௩. நவக்கிரகங்களும் நக்ஷத்திரங்களும் இத்தலத்தை வலஞ்செய்தல், "எண்ணி லங்குறை சராசர மிலிங்கமென் றெண்ணி, விண்ணி னுள்களுங் கோள்களும் விலங்குவது" (திருவிளை. ௩௬ : ௩) என்பதனுலும் விளங்குகின்றது; இந்நூல், ௩௭௧ - ஆம் கண்ணியைப் பார்க்க.

கக௫. வேள் போது அஞ்சு எய்யும் போர் - மன்மதன் ஐந்து மலர்ப் பாணங்களை எய்யும் சண்டையை.

கக௫ - ௬. விடத்தைத் தன்கழுத்தில் தரித்தருளி. பெண் - திருமகள். பெண்கழுத்தில் தாலியைவைத்த. எண்கழிக்கும் - அளவு கடந்த.

கக௭. தொழும்பு ஆவணம் - அடிமையோலை.

கக அ. பழவினை வேரறுப்பான் வந்தான் பருவெண்
மழவிடை யேறுயர்த்தான் வந்தா - னழகியமின்

கககூ. மங்கைக்கு வாய்த்த மணவாளன் வந்தானென்
றங்கத் திருச்சின்ன மார்ப்பெடுப்பப் - பொங்கு

கஉ௦. நதிமாதர் கோக நகமாதர் தெய்வ
மதிமாதர் நீடுவசு மாதர் - கதிர்மாத

கஉக. ரேழ்மாதர் வேலோ னிருமாத ரெண்டிசைக்கே
வாழ்மாத ரேழ்முனிவர் மாதர்கள் - சூழ்வானச்

கஉஉ. சுந்தர மாதரெனத் தோன்றிரதி மாதருட
னந்தர மாத ரனைவர்களுஞ் - சிந்தைமகிழ்

கஉஙு. கோலங்காட் டித்தான் குனிக்குந் திருக்கூத்தை
யாலங்காட் டிற்பார்க்கு மம்மையரு - மூலங்காண்

கஉச. சீரிசை யாடிநிழற் செம்ம றனைப்பயந்த
பேரிசை ஞானிப் பிராட்டியரு - மேரிசைதென்

கஉரு. சையத் தமிழ்நாட்டிற் சைவந் தலையெடுப்பச்
செய்விக்கும் பாண்டிமா தேவியரு - முய்விக்கு

---

கக அ. தம்மை அடைவாருடைய எல்லாப் பாவங்களையும் தீர்த்தருளுதல் பற்றித் திருப்பூவணேசருக்கு அடைவார் வினைதீர்ப்பவரென்பது திருநாமமாதலால், இங்கே 'பழவினைவேரறுப்பான்' என்றார்; "அடைவார்வினைதீர்த்த, பேரைப் புதுக்கீர் பிரான்" (கருச), "அடைவார் வினைதீர்க்கு மம்மான்" (சகூஎ) என இந்நூலுள் வந்திருத்தல்காண்க; "அடைவார் வினைதீர்க்கும், புரிவுடையாருறை பூவண மீதோ", "அண்ணலெ ஞரினை வார்வினை தீர்ப்பார்" (சுந்தா. தே. க, உ)என்னுந்திருவாக்கையும் உணர்க.

கஉ௦. மதிமாதர் - சந்திரனுடைய தேவிமார். கதிர் - சூரியன்.

கஉஙு. ஆலங்காடு - திருவாலங்காடு. அம்மையர்-காரைக்காலம்மையார்.

கஉச. ஆடி - கண்ணாடி. ஆடிநிழற்செம்மல் - சுந்தரமூர்த்திநாயனார். "அந்தமாதியி லானிழல் வடிவமா யாடியி னிழல்போல, வந்த சுந்தரன்" (திரு விளை. ரு: ககஉ), "இட்டமக் கோரிஙவ லின்றுவரு மென்றுமலர், மட்டுறுதாராரூரன் மன்னுவகை - யுட்டுளைய......பவளக்காற் கண்ணாடி பார்த்து" (திரு விடை. கஅசு - கூ) என்பவை இங்கே அறியற்பாலன. பேரிசை ஞானிப்பிராட்டியார் - இசைஞானியார்.

கஉச - ரு. தென்சையம் - பொதியின்மலை. தமிழ்நாடு - பாண்டிநாடு. பாண்டிமாதேவியர் - மங்கையர்க்கரசியார்.

கஉசு. மந்தண் வயற்பொலிதென் ஞரூரி னம்பிக்கா
வந்துலகி லுற்பவித்த மங்கையருஞ் - செந்துவரின்

கஉஎ. மின்றழைத்த வேணி விமலனைத் தன்வீட்டி
லன்றழைத்த மெய்ப்பொ னனையாரு - நின்றுருகி

கஉஅ. யாரணச் செம்பொ னடிபோற்ற வெம்பெருமான்
ஹேரண வீதிதனிற் ஹேன்றினுற் - சேரமரர்

கஉகூ. தட்ப வனப்பாரி சாத வனமழையாற்
புட்பவன மாம்பேர் புதுக்கினர் - பெட்புமின்னுள்

## குழாங்கள்.

கஙo. போர்க்கைத் திருமழுவார் புட்ப வனப்புதுமை
பார்க்கத் திரண்டகிளிப் பண்பென்னப் - பேர்க்கரிய

கஙக. நீலகண்டங் தம்போ னிமலன் படைத்திருந்த
கோலநின்று பார்க்குமயிற் கூட்டமெனப் - பாலுகந்த

கஙஉ. வாகத் தழகியமின் னம்மை யெழில்பார்க்க
மேகத்தை விட்டுவந்த மின்களென - வேகவொற்றை

கஙங. மான்விட் டதனுல் வசஞ்செய்தா னென்றறவோர்
தான்விட்ட மான்கூட்டத் தன்மையென - வான்முட்ட

---

கஉசு. உற்பவித்தமங்கையர் - பரவைநாச்சியாரும், சங்கிலிநாச்சியாரும். துவர் - பவழம்.

கஉஅ - ஙo. தண்பவனம் - தண்ணியகாற்றையுடைய ; தட்பத்தையும் அழகையுமுடையவென்றுமாம். தேவர் மலர்மாரிபொழிந்தார். மின்னுள் - அழகிய மின்னம்மை. கை - காம்பு; திருமழுவார் - மழுப்படையையுடைய திருப்பூவணேசர். இவ்விருவரும் எழுந்தருளியபுட்பவனமென்க. பேர்க்க அரிய- நீக்குதற்கரிய.

கஙக. மயிலுக்கு நீலகண்டமென்று ஒருபெயருண்டு ; காரணப்பெயர் ; "கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா" (சீவக. கடுருஅ) என்பதனுலுமுணர்க.

கஙஉ. மின்னம்மையாதலால் மின்கள் பார்க்க வந்தன.

கஙஉ-ங. வேக ஒற்றைமான் - வேகத்தையுடைய ஒருமான். அறவோர் - முனிவர். சிவபிரானை வெல்லுதற்குத் தாருகாவனத்துமுனிவர் யாகத்தில் ஒருமானையுண்டாக்கி அனுப்பியதும், அதனைப்பிடித்து அவர் திருக்கரத்திலேந்தியதும் இங்கே அறியற்பாலன; தான், அசைநிலை; பல மானைவிடினும் வசஞ்செய்யாரென்றெண்ணினர். வான்முட்ட-தேவருலக முழுவதும்.

கருச. வேங்கக் குயிலைமகத் தீடழித்தா னென்றுபழி
வாங்கக் குயிரிரண்டு வந்தவென - வாங்கொரனங்

கருரு. காணுப் பழிப்பகலக் கண்டறிவோ மென்றரன்முன்
சேணுட்டி னன்னமெலாஞ் சென்றவெனத் - தாணுட்டு

கருசு. முன்றிலின் மாட முகப்பினின் மேடை யிற்செய்
குன்றினிற் சாளரத்திற் கோபுரத்தின் - மன்றிற்

கருஎ. றடத்தினின் மண்டபத்திற் சாரரங்கிற் றெற்றி
யிடத்தினில் வீதியினி லெய்தி - மடற்குவளைச்

கருஅ. சேயரிக்கண் மின்னார்நந் தெய்வப் பலாப்பழத்திற்
கீயினத்தின் மொய்ப்பா ரிருமருங்கு - நேயமிகப்

கருகூ. பூத்து மலர்கருணைப் புட்பவனப் பூந்தேனைப்
பார்த்திருகண் வண்டாற் பருகுவார் - தீர்த்தனணி

கச0. கங்கை தவத்தை வியப்பார் கதிரிமவான்
மங்கை தவத்தை வழுத்துவார் - தங்க

கசக. டவக்குறையை நோவார் தடந்தோளை நோக்கி
நிவக்கு முலைநோக்கி நிற்பா - ருவக்கு

கசஉ. மிகச்சின்ன நுண்ணிடையார் மெல்லியலாள் வைத்த
நகச்சின்ன நோக்கியுள நைவார் - பகைச்சின்ன

---

கருச. குயிலை-இந்திரனுகியகுயிலை. மகம் - தக்கன்யாகம். இந்திரனுகிய குயிலை ஈடழித்தமை, "மடிந்தனன் கூற்றுவ னுக வாசவ, னுடைந்தனன் குயிலென வுருக்கொண் டும்பரி, னடைந்தன னதுபொழு தண்ணல் கண்ணுறீஇத், தடிந்தனன் வீட்டினன் றடக்கை வாளினல்" (கந்த. யாகசங்கார. உஅ) என்பதனுல் விளங்குகின்றது.

கருரு. தாண் - தோரணகம்பம்.

கருசு. செய்குன்று - கட்டுமலை.

கருஎ. தடம் - நீர்க்கரை. தெற்றி - திண்ணை.

கருஅ. பலாமரத்தினடியில் எழுந்தருளியிருத்தல் பற்றித் திருப்பூவணேசரை, 'தெய்வப்பலாப்பழம்' என்றூர்; "தேவி வளர்த்ததிருத் தெய்வப்பலா வடியின், மேவிப் பழுத்த வியன்கனி" என்பர் பின்னும்; கசுரு. ஈ - தேனீ.

கசக. தோள் - இறைவன்தோள்.

கசஉ. சின்ன - சிறிய; "மாசின சின்னத்துணி" (சீவக. உகூ உகூ.) மெல்லியலாள் - பொன்னனையாள். நகச்சின்னம்-பொன்னனையாளுடைய நகத்தழும்பு. "கையுநுண் ணிடையினளங் நாயகன் கபோலத் திட்ட, கையுகிர்க் குறியுஞ் சொன்ன காரணக் குறியுங் கொண்டு, வெய்யவெங் கதிர்கால் செம்பொன் மேனிவே ருகிநாலாம், பொய்யுகத் தவர்க்குத் தக்க பொருந்துரு வாகி மன்னும்" (திருவிளை. ருசு: ரு0.) பகைச்சு - பகைத்து.

கசங. மாவதென் னென்றிவர்மே லவ்வேளெய் யானென்பார்
பாவங் கொடிதெம் பழியென்பார் - தேவரிவர்

கசச. வெள்ளிக் கிரிமுலையாய் மேவற் குபாயமிதென்
றள்ளித் திருநீ றலங்கரிப்பா - ருள்ளூறுபொன்

கசரு. வாகார் பசலையிற்கை வன்சிலையாக் கொள்ளுமென
வேகாசம் வீழ வெதிர்நிற்பார் - மாகாதல்

கசசு. வெள்ளத்தை நீந்த விடையோனை நாவாய்கேட்
டுள்ளத்தி னுள்ளே யுருகுவார் - வள்ள

கசஎ. திருமேனிப் பாதியே தெள்ளமுத மற்றை
யொருபாதி யும்விடமென் றோர்வா - ரரன்மேல்

கசஅ. விரிபூ மழைபோல் விரியாது தம்மேற்
சொரிபூ மழைநோக்கிச் சோர்வா - ரரிதாய

கசகூ. வெம்மருந்தி னாற்சடைமே லிந்து குளிர்ந்திருப்ப
தம்மருந்தைச் சொல்லீ ரடிகளென்பார் - விம்மியமீன்

கருo. மேல்வலைவீ சிப்பிடித்தீர் மேனாளிந் நாள்விழிமீன்
மால்வலைவீ சிப்பிடிப்பீர் வந்தென்பார் - சால்கூடற்

கருக. செய்க்கரும்பைக் கல்லானை தின்னக் கொடுத்தீர்வேள்
கைக்கரும்பைத் தின்னாதோ காணென்பார்-மெய்க்கரும்பாம்

கருஉ. பட்பவள வாயர்முனி பன்னியர்வாழ் தாருவனம்
புட்பவன மாக்கினீர் போந்தென்பார் - புட்பவனங்

---

கசங. 'கொடிது' என்பதைப் பழியென்பதனோடுங் கூட்டுக.

கசரு. வாகு - அழகு. பசலையின் - பசலையை உடைமையால்; பசலை பொன்னிறமுடையது. வன்சிலையா - மேருமலையாகிய வில்லாக. ஏகாசம் - உத்தரீயம்.

கசசு. நாவாய் - கப்பல்; நாவையுடையவாய்; சிலேடை.

கசஎ. திருமேனிப்பாதி - அம்பிகையின்பாகம்.

கசஅ. மன்மதபாணம் மொட்டறுமலராதலின், 'விரியாது தம்மேற் சொரிபூமழை' என்றார்; "சுருப்புநாண் கருப்புவி லருப்புக்கணை தூவ", "கருப்பு வில்லியை யருப்புக்கணை மைந்தனை", "கருப்பு வில்லி யருப்புக்கணை தூவ" (மணி. கஅ: கoரு; உo: கூஉ; உரு: கூo) என்று வருதல்காண்க; "கரும்புஞ் சுரும்பு மரும்பும் பொரும்படைக் காமர்வில்வேள்" என்பர்; **சிதம்பரச்செய்.** எச.

கசகூ. சடை மேலுள்ள பிறை எந்த மருந்தினாற் குளிர்ந்திருக்கின்றது?

கசகூ - ருo. வலைவீசிய திருவிளையாடல் இங்கே அறியற்பாலது. மாலாகிய வலையை வீசி எம்விழிகளாகியமீனைப் பிடிக்கின்றீர்.

கருஉ. பண்ணையுடைய பவளவாயர். நீர்போந்து புட்பவனத்தைத் தாருவனமாக்கினீர்.

கடுங. காணி யுமக்கோவிற் காமனுக்கோ சொல்லீர்கைப்
பாணிமழு வேந்துநீர் பார்த்தென்பார் - தூணிமத

கடுச. ஞரைத் தடுத்தே யடைவார் வினைதீர்த்த
பேரைப் புதுக்கீர் பிரானென்பார் - பாரித்த

கடுரு. தேரோட வோடப்பின் சென்றோடி யோடிக்க
ணீரோட வோடநின்று நெட்டுயிர்ப்பார் - சீரோடு

கடுசு. மவ்விரத வாதந்தா னன்றுசெய்தா ரின்றுசெய்தா
ரிவ்விரத வாத மெமக்கென்பார் - கவ்வைக்

கடுஎ. கிடைவார் கலையு மிழப்பா ருருகி
யுடைவா ரிவரு ளொருத்தி - தடமலரோ

## பேதை.

கடுஅ. னட்டதிக்கார் பெண்மை யழகு குடிபுகுத
விட்டதொரு மூர்த்தமெனு மென்பேதை - கிட்டுநனை

கடுகூ. கூறும் பொதிமலர்பூங் கொட்டை மதுமணமோ
ராறுந்தன் னுள்ளடக்கு மம்புயஞ் - சீறும்

கசுo. விழிதாங்கு நாதனைவில் வேளிரதி பண்டைப்
பழிவாங்கப் பெற்றனைய பாவை - யெழிருங்கு

கசுக. சங்கை மருவாத் தரள மிரதிபதி
செங்கை மருவாச் சிறுகரும்பு - பொங்கநலம்

---

கடுங. காணி - உரியஇடம்; படைவீடு; "ஆர்க்கும் படைவே ளரசிருப்பென் றஞ்சா தடிக ளருட்காசி, யூர்க்கும் புதுத்தோ ரணம்வைத்தா லுமக்கிங் கிவள்பேச் சுரைப்பாரார்" (காசிக். கச) என்பது இங்கே அறியற்பாலது. பாணி - கை; கை மழு ஏந்தும் நீர் - சிறிய மழுப்படையை ஏந்துகின்ற நீர்.

கடுசு. அவ்விரதவாதம் - அந்த ரஸவாதலீலை. இ இரதவாதம் - இந்தத் தேரால் தடுத்தலை; வாதம் - தடை. கவ்வை - துன்பம்.

கடுஎ. இடைதல் - பின்னிடுதல்.

கடுஅ - கூ. மூர்த்தம் - உருவம். நனையும் பொதியும் மலரும் கொட்டையும் மதுவும் மணமுமாகிய ஆறும்; இவள் பின் அடைதற்குரிய பெதும்பைப்பருவ முதலிய ஆறையும் குறிப்பித்தபடி.

கடுகூ. சீறும் - மன்மதனைச் சீறிய.

கசுo. விழி - நெற்றிவிழியை. பண்டைப்பழி - முன்னம் மன்மதனை யெரித்தது.

கசுஉ. பூத்தறியாப் பூங்கொம்பு போகமறி யாப்பைங்கூழ்
கோத்தறி யாத குலரத்ன - மேத்த

கசுங. விரித்தறியாத் தோகைமயில் வெண்பாலு நீரும்
பிரித்தறி யாதவன்னப் பிள்ளை - மரித்தறியா

கசுச. மைதிகழு நீலகண்டன் வாழ்கின்ற புட்பவன
மெய்திவிளை யாடா விளஞ்சுரும்பு - வைதிகநூ

கசுரு. னேசன் றிருக்கரத்தி னின்றுந்தென் புட்பவன
வாசஞ் செயக்குதித்த மான்கன்று - வீசியவாட்

கசுசு. போரறி யாத பொலங்குழையாண் மன்மதனூற்
பேரறி யாத பிராயத்தாள் - வார்வீழ்த்த

கசுஎ. கொங்கையைச்செப் பென்றுவைத்துக் கொண்டுவிளை யாடு
மங்கையனைக் கேட்டு வருந்துவா - டங்குமனைச் [மட

கசுஅ. செய்யசுவர்ச் சித்திரத்திற் றீட்டுகெத லிக்கனியைக்
கையிற் கிளியருந்தக் காட்டுவா - ளையமறப்

கசுகூ. பூசைவரக் கண்டோடிப் போயோ வியப்புறவை
யாசையுடன் கூட்டி லழைத்தயர்வாள் - வீசுமுன்றில்

கஎ0. வெள்ளைக் கதிர்நிலவை வெண்பா லெனப்பளிக்கு
வள்ளத் தினின்முகந்து வாய்வைப்பாள் - விள்ளும்

கஎக. படிசே ரிறாலிற் படுகோது நீக்கி
வடியாத தேன்மழலை வாயாள்—கடியாமுன்

கஎஉ. பல்லைவிடப் போகாப் பணிநஞ்சு போலத்த
னெல்லைவிடப் போகா விருவிழியா - டொல்லபர

---

கசுஉ. போகம், சிலேடை. கூழ் - பயிர்.

கசுங. கலாபத்தை விரித்தறியாத. மரித்து அறியா - இறந்தறியாத; "எல்லா முடையா னிறத்தல் பிறத்தலிரண், டில்லானென் றெல்லாரு மேத் தெடுப்பான்" திருவிடை. சகூக.

கசுரு. நேசன் - சிவபெருமான். 'வாள்' என்றது கண்ணை.

கசுக - ரு. இவ்வடிகளில், பேதையின் இளமைப்பருவத்தைப் பாராட்டிய அணிநயம் மிகஇன்புறற்பாலது.

கசுசு. வீழ்த்த - நீக்கிய. கசுஎ. கேட்டு - செப்புவேண்டுமென்று கேட்டு.

கசுகூ. பூசை - பூனை. ஓவியப்புறவு - சித்திரத்திலெழுதியபுறு.

கஎக. இறால் - தேன்கூடு. வடியாததேன்போலும் மழலைச்சொல்.

கஎஉ - ங. அபரபக்கம் - பின்பக்கம். பயப்பய = பையப்பைய - மெல்ல மெல்ல.

கஎங. பக்கக் கலைகள் பயப்பயப் போய்த்திரும்ப
வொக்க நிறைந்தனைய வொண்ணகையாண் - மிக்கமுத்தி

கஎச. நாட்டினுமா ரூர்விரும்பு நாவலூ ரன்மணம்போற்
கூட்டினுங் கூடாத கூந்தலாள் - வீட்டி

கஎரு. னிறைந்த திருநெடுமா னீள்செவியி னுள்ளே
மறைந்த மதுகயிட வர்போற் - பெரும்பிரண

கஎசு. வத்தி லடங்கு மறைபோற் றதீசிசரீ
ரத்தி லடங்குவச்சி ராயுதம்போற் - குத்திரத்தின்

கஎஎ. மேலொரு நாளொருத்தி மெய்யிற் கனல்வேந்தன்
சால வொளித்த தகைமைபோல் - வாலிதனை

கஎஅ. யெய்ய மறைந்த விராமன்போற் றோன்றிவர
மெய்யின் மறைந்த வியன்முலையா - டெய்யநிறந்

கஎகூ. துன்னு பளிக்குமுன்றிற் றோன்றுநிழற் பாவைதனை
யின்னுயிர்ப் பாங்கி யெனக்கொண்டு - தன்னகத்திற்

கஅ0. சிற்றி லிழைத்தயருஞ் சேயிழையா ளங்கவளை
மற்றொருகைத்தாய் மடியிருத்தி - முற்று

கஅக. வழகு தரக்கனிந்த வாரமுதச் செவ்வாய்
மழலை மொழிதிருந்தும் வண்ணம் - பழையமறைப்

கஅஉ. பூவண மென்றுநிறை பூவணங்கோ யில்கொண்ட
தீவண மேனிச் சிவனென்றுங் - காவணவுங்

---

கஎங - ச. முத்தியுலகத்திலும் சிறந்ததாகத் திருவாரூரை விரும்பிய நாவலூரன் - சுந்தரமூர்த்திநாயனார். சுந்தரமூர்த்திநாயனாருடையமணம் முன் கூட்டமுயன்றும் பின்கூட்டப்படாமற் போனமை ஈண்டு உவமம். வீட்டில் - பிரளயகாலத்தில்.

கஎரு. மதுவும் கைடவனும்; இவ்விருவரும் அசுரர்.

கஎசு. மறை - வேதம். ததீசிமுனிவருடம்பில் வச்சிராயுதமடங்கியிருந்தமை திருவிளையாடல், இந்திரன் பழிதீர்த்தபடலத்தால் அறியலாகும். குத்திரம் - வஞ்சனை.

கஎஎ. ஒருத்தியென்றது ஔரவமுனிவரின் தாயை; வடவைத்தீ முதலியவற்றின் காரணமாகிய கடுங்கோபத்தையுடைய அம்முனிவரை அவர்தாய் நெடுங்காலம் தொடையுள் தரித்த வரலாறு ஈண்டு அறியற்பாலது; பாரதம், ஆதிபர்வம், கககூ - ஆம் அத்தியாயம் பார்க்க.

கஅஉ. ''ஆவண வீதிப் பூவணங் கோயில்கொண்டாயே'' என்பது, கருவூர்த்தேவர் திருவிசைப்பா; க - எ. கா அணவும் - காத்தல்பொருந்திய; சோலையையொத்த.

கஅங. தெய்வப் பலாவென்றுந் தெய்வப் பலாவடியிற்
சைவப் பொருளாந் தவமென்றுந் - துய்யதிரை
கஅச. வையைநதி யென்று மணிகர் ணிகையென்று
மைய னிடம்பிரியா வம்மையென்று - மொய்கயிலேக்
கஅரு. குன்றி லிருந்தருளுங் கோனென்றுந் தில்லேமணி
மன்றி னடம்புரிபெம் மானென்று - மென்றுவர்வாய்ப்
கஅசு. பைங்கிளிக்கு மென்சொற் பயிற்றுதல் போற்பயிற்றி
யங்கவள்கேட் டுண்மகிழு மவ்வெல்லே - யெங்குமொரு
கஅஎ. தாய்வயிறு காணுத் தருமத் திருவுடம்பை
வேய்வயிறு கண்ட வியன்பதியுங் - காவிரிவாய்ச்
கஅஅ. சீருருவப் பேருருவச் செந்தீத் திருவுருவ
நீருருவ மாக நிகழ்பதியு - மோருமையா
கஅகூ. லார்க்குந் தெரியா வருமைத் திருமேனி
சேர்க்குந் தழும்பிருந்த சீரூரு - மேர்க்குமறை
ககூ0. தேற்றுமயன் காணுத் திருமுடியை வையைப்பே
ராற்றின் மணல்கண் டறிபதியும் - போற்றுநெடு
ககூக. மாய னறியா மலர்ப்பாதம் பொன்னனேயா
டேய மனேயறியுந் தொன்னகரு - மேயபிரான்
ககூஉ. றேவர் நெருங்கத் திருத்தேர்ப் பவனிவா
ரூவி திருச்சின்னந் தானிசைப்பப் - பாவையன்னே
ககூங. முன்செலப்பின் சென்றுகர முன்குவிக்கப் பின்குவித்து
நன்குதுதிக் கத்துதித்து நாடிய - பின்பேதை
ககூச. கைத்தா யரைப்பார்த்துக் காண்டகு சோதிதரு
மித்தேரி லார்சொல் லெனக்கேட்டா - ளத்தேரிற்

---

கஅங. துய்ய - தூய; "துய்ய மாமதி யனேய" பிரபுலிங்க. கை லாய. சரு.

கஅஎ. திருநெல்வேலி.

கஅஅ. இறைவனது தீயுருவம் நீருருவமான தலம் திருவானேக்கா; செழு நீர்த்திரளென்பது அத்தலத்தில் இறைவன் திருநாமம்; "தென்னனேக் கா வானேத் தேனேப் பாலேச் செழுநீர்த்திரளேச்சென் ருடி னேனே" தே. திருநா.

கஅகூ. திருக்காஞ்சி. ககூ0. மதுரை.

ககூக. திருப்பூவணம். ககூஉ. பவனிவரலே.

ககரு. றேவி வளர்த்ததிருத் தெய்வப் பலாவடியின்
மேவிப் பழுத்த வியன்கனியென் - ருவலுற

கககூ. மாது தனக்குழைப்ப மற்றதனைத் தாருமெனக்
காதலுடன் கேட்டழுது கண்பிசையப் - பேதைகே

ககஎ. ளிந்தக் கனியெவர்க்கு மெட்டா நறுங்கனிகாண்
முந்தப் பழமறையீ மொய்ப்பதுகாண் - சந்ததமு

ககஅ. மொன்ருய்ப் பலவா முருவிற் பொருந்தியெங்கு
நன்ருய்ப் புறம்புமுள்ளு நண்ணுங்காண் - குன்ருத

கககூ. பாவு மலையிற் பசுந்தே னுடன்கலந்தங்
கோவில் கருணைரச மூறுங்காண் - மேவுமன்ப

உ00. ருள்ளத் தினிக்குங்கா ணோர்பொன் னனையாட்குக்
கிள்ளப் பழுத்துக் கிடக்குங்காண் - விள்ளும்

உ0க. பெரிய முகுந்தப் பிரமா தியர்க்கு
மரிய பழங்கா ணணங்கே - பரிவகனீ

உ0உ. யென்னும் பொழுதி விரதமேற் கொண்டிருக்கும்
பன்னுங் கருணைப் பழமகல - வன்னையரு

உ0ங. மந்தக் கனிந மகத்தி விருப்பதென
விந்தக் கனியையிற்கொண் டேகினர் - வந்தமத

உ0ச. னென்றுஞ் சிறியார்க் கினியதுகாட் டாரெனத்தன்
வன்றிண் சிலையை மறைத்தகன்ருன் - றுன்றுங்

## பெதும்பை.

உ0ரு. கரையற்ற பெண்மைக் கவின்சிறிது காட்டு
முருவப் பெதும்பை யொருத்தி - யிருள்போய்ப்

உ0கூ. புலர்ந்தும் புலராப் பொழுதிற் சிறிதே
யலர்ந்து மலரா வரும்பு - கலந்தன்பு

---

ககரு. உஅ-உகூ - ஆம் கண்ணிகளின் குறிப்பைப்பார்க்க.

கககூ. அதனை - அப்பலாப்பழத்தை. ககஎ. மறையாகிய ஈ.

கககூ. மலையிற்பசுந்தேன் - உமாதேவியார்.

உ0உ. இரதம் - தேர்; ரஸம். கருணைப்பழம் - சிவபெருமான்.

உ0ங. அகம் - மனம்; வீடு. இந்தக்கன்னியை.

உ0ச. சிறியார்க்கு என்றும் இனியதுகாட்டார்.

௨௦௭. கூரவரும் தாய்சமைத்த கூட்டிற் கிடவாத
தேரு மிழாத சிறுகிள்ளை - சீரியதன்

௨௦அ. கார்க்குஞ் செனவளர்த்த காகவன் புண்மருண்டு
பார்க்கநிறங் காட்டும் பசியகுயி - லேர்க்க

௨௦௯. நிறைந்து விடும்பாலு நீரும் பிரிக்க
வறிந்துமறி யாப்பருவ வன்ன - முறைந்துதனி

௨௧௦. மேவி யிருந்தினிமேல் வேண்டு முரைபார்க்கப்
பூவின்மத னூற்பாடம் போற்றுவாள் - பாவையுமை

௨௧௧. யார்த்த சரவணத்தி லண்ண லுருக் கூட்டுதல்போற்
சேர்த்திகுளை கூட்டுந் திருக்குழலாள் - கூர்த்து

௨௧௨. வியனீரிற் ருயுடன்போய் மென்மெல நீந்துங்
கயல்போற் புடைபெயர்ச்சி காட்டி - யயலவரைத்

௨௧௩. தெட்டும் புரட்டுந் திருட்டும் புகுந்துகொலை
மட்டும் புகுதா வரிவிழியா - ளெட்டரிய

௨௧௪. வண்டபகி ரண்ட மளக்கத் திருநெடுமால் [ல்வேள்
கொண்டகுறள் போன்முகங்கொள் கொங்கையா - டிண்டிற

௨௧௫. கூடு மிளம்பருவக் கோலத்தி லேறிவிளை
யாடுசிறு தேரனைய வல்குலா - டோடுருவு

௨௧௬. மத்திரக்கண் மங்கையரு மாடவருஞ் செய்கலவி
சித்திரத்தி னல்லாற் றெரிந்திடாண் - மெத்தவுரு

---

௨௦௭. கிடவாத கிள்ளை, தேருமிழாதகிள்ளை யென்க; கிளி மன்மத னுடைய தேருக்குக் குதிரையாகக் கூறப்படும்.

௨௦அ. காக்கையின் கூட்டிற் குயிற்குஞ்சுவளர்தல் இயல்பு.

௨௧௦. பூவில் - பூவாகியவில்; "பூவிற், கையதே மலர்வாளிக் காளை" என்பர்; திருவிளை. ௨௩: ௨௫.

௨௧௦-௧௧. உமாதேவியார், முருகக்கடவுளுடைய ஆறு திருவுருவத்தையும் ஒன்ருகக்கூட்டினமை ஈண்டுவமம்; "சீறியெரி, யூட்ட மதின்மூன் றழிநிகழ்ந்த வண்ணம்போற், கூட்டி முடிக்குங் குழலினாள்" (ஏகாம்பா. ௨௨௩ - ௪); "சண்பை, நாட்டிறைவ னுரெண் ணகத்தமண ரைச்செயல் போற், கூட்டி முடித்த குழலினாள்" திருவிடை. ௩௭௫ - ௬.

௨௧௩. தெட்டும் - வஞ்சிக்கும்.

௨௧௫. தோடு உருவும் - காதணியை உருவிச் செல்லும்.

உகஎ. வன்னச் சிறுநடையா லாலிங் கனவனப்பாற்
கன்னிக் கொலைசிறிது கைவந்தாண் - மின்னுஞ்

உகஅ. சுதைநிலா முற்றத்துத் தோழியருந் தானும்
புதியகுட நீர்வார்த்துப் போற்றிப் - பதமறிந்து

உககூ. தன்னைவளர்க் குஞ்செவிலித் தாய்போ னிதம்பேணி
மன்னி வளர்க்க வளர்முல்லை - யன்னதுதான்

உஉ0. தன்சிறுபற் போலரும்பு தான்படைப்பக் கண்டுசிறந்
தன்பு மலர வகமலர்ந்து - முன்பணியுர்

உஉக. தாதிய ரேவல்செயத் தாயர் களிதூங்க
மேதகு பல்லியம்வாய் விட்டார்ப்பப் - போதவிழுங்

உஉஉ. கோதை புதுவிழாக் கொண்டாடித் தன்பருவ
மாதருட னங்கண் மகிழ்போதின் - மோதுபனி

உஉங. மொய்வந்த தென்னிமய முல்லைக் கொடிபடர்ந்த
செவ்வந்தி வண்ணச் சிவக்கொழுந்து - மெய்வரைவிற்

உஉச. கோட்டுங் திருப்புயத்திற் கொன்றையொடுஞ் சொன்மாலை
பூட்டுந்தே வாரப் புலவர்களு - நாட்டுபுகழ்த்

உஉரு. தென்னந் தமிழிற் றிருவா சகப்புலவ
னென்னும் பெரியவன்பி னெங்கோனும் - பொன்னலருஞ்

உஉசூ. செந்தா திலங்குந் திருக்கொன்றை வேணியர்மே
லந்தாதி பாடியவென் னம்மையு - நந்தேவர்

உஉஎ. வீதி யுலாங்கயிலை வெற்பி லரங்கேற்று
மாதி யுலாவுரைத்த வன்பனுஞ் - சோதிமலைப்

---

உகஎ. முதலிற் செய்யும் போரைக் கன்னிப்போ ரென்றும், முதல் வேட்டையைக் கன்னிவேட்டை யென்றுங் கூறுதல் மரபாதலின், 'கன்னிக் கொலை' என்றார்.

உகஅ. பதம் - காலம். உககூ. முல்லையாகிய அன்னது.

உககூ-உஉ. "அல்லியங் கோதைமாத ரன்பொடு வளர்த்த முல்லை, மெல்லரும் பீன்ற தென்ன விழாவயர் முழவு" நைடதம், நாட்டு. கஅ.

உஉச. திருஞானசம்பந்தர் முதலிய மூன்று நாயன்மார்கள்.

உஉரு. "தென்னந் தமிழினுடன் பிறந்த சிறுகால்" என்பர் (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், தாலப். க.) எங்கோன் - ஸ்ரீமாணிக்கவாசகர்.

உஉசூ. அந்தாதி - அற்புதத்திருவந்தாதி. அம்மை - காரைக்காலம்மை [யார்.

உஉஎ. அன்பன் - சேரமான்பெருமாணாயனார்.

உஉஅ. பெண்பாகங் கொண்ட பிரான்மெய்ப் பதிதோறும்
வெண்பாவி னுற்புகழ்ந்த வேந்தனும் - பண்பாப்

உஉகூ. பிரமனைமுன் னுட்சிரங்கொள் பெம்மானுக் கன்பாய்ப்
பரமனை யேபாடு வாரு - மருதிடங்கொள்

உஙo. பைம்மணிக் கோவைப் பணியா பரணர்மேன்
மும்மணிக் கோவைசொன்ன மூர்த்தியுந் - தம்முருவாய்

உஙக. வாழ்வாரும் வாழ்த்தி வருவாரு மெய்யுருகிச்
சூழ்வாரு மெம்மருங்குஞ் சூழ்ந்துவரத் - தாழ்வில்லாத்

உஙஉ. தெய்வப் பலாவின் றிருநீழல் வீற்றிருப்போன்
சைவத் திருவீதி சாருதலு - மையற்

உஙங. செயல்சற் றறிவிழியாள் சேயிழையா ரோடு
மியலுற் றெதிர்போ யிறைஞ்சிக் - கயிலைக்

உஙச. கிரிக்கு ளமர்ந்தபிரான் கேசாதி பாதப்
பரப்பி னழகையெலாம் பார்த்தா - ளொருத்தி

உஙரு. தபோபலம் வாய்த்தபெருஞ் சாட்சிக் கிருந்த
கபோல நகக்குறியைக் கண்டாள் - சுபாவந்

உஙசு. தெரிந்தமட வீரிந்தத் தேவர் கபோலத்
திருந்தகுறி யென்னகுறி யென்று - டிருந்துகுயிற்

உஙஎ. பிள்ளையே யெங்கடவப் பேறே வரிவளைக்கைக்
கிள்ளைநீ யின்னமிது கேட்டிலையோ - தெள்ளுகடல்

உஙஅ. வண்ணனறி யாப்பதமில் வாயில் வரத்தவஞ்செய்
பெண்ணமுது கைபடைத்த பேறுகா - ணெண்ணி

உஙகூ. லருவுருவ மில்லா வரனைக் கருணைத்
திருவுருவஞ் செய்தாள் செயல்கா - ணிருநயனந்

---

உஉஅ. வேந்தன் - ஐயடிகள் காடவர்கோனுயனுர்; இவரருளிச்செய்த வெண்பா கேத்திரத்திருவெண்பா.

உஉகூ. மருது இடங்கொள்-மருதமரத்தின் அடியை இடமாகக்கொண்ட; ''மருதிடங் கொண்ட மருதமாணிக்க'' திருவடை - மும்மணி. உஉ.

உஙo. மும்மணிக்கோவை - திருவிடை மருதூர் மும்மணிக்கோவை. மூர்த்தி - பட்டினத்துப்பிள்ளையார்.

உஙச. ஒருத்தி - பொன்னனையாள்.

உஙரு. கபோலம் - கன்னம். பொன்னனையாளின் நகக்குறியை.

உஙஅ. பதம் - இறைவன் திருவடி. பெண்ணமுது - பொன்னனையாள்.

உசo. துள்ளிமுத்தங் கொள்ளயனந் தூயதிருப் பொன்னனேயா
ளள்ளிமுத்தங் கொண்டவடை யாளங்கா - ஞெள்ளிழையாய்

உசக. கண்டருணீ யென்னவுட்கொள் காதல் புறந்தெரியக்
கொண்ட புளகக் குறிப்பெய்த - வண்டேதக்

உசஉ. கேட்டு மலருங் கிளர்தா மரைமுகைபோ
லீட்டிய செவ்வி யெழில்படைத்தாண் - மீட்டிவளேப்

உசா. பார்த்ததும் பாரா ததுவுமாய்ப் பைங்கொன்றைத்
தீர்த்தனு மந்தத் தெருவகன்ரு - ஞர்த்த

உசச. சிறுநா ணுறுமடமின் செய்கைதெரி வில்வேள்
சிறுநா ணொலிதுலக்கிச் சென்ருன் - மறுதெருவிற்

மங்கை.

உசரு. சட்டமிடும் வில்வே டளநா யகப்பட்டங்
கட்ட வளர்ந்த கவின்மங்கை - முட்டவசைந்

உசசா. தார வளேந்துதுவண் டாடுமிடை யுங்கருத்தும்
பார மறிந்த பருவத்தாள் - வீரமிகும்

உசஎ. வாட்கைக் குமரருக்கு மையற் பிணிகொடுத்து
மீட்கத் தெரியும் விழியினுள் - வேட்கைதரும்

உசஅ. வானிற் சுரபியின்பால் வண்மையுடைக் கற்பகப்பூந்
தேனிற் கலந்தனேய செவ்விதழாண் - மேனிற்குங்

உசகூ. காருலவு தண்ணங் கடல்போ லகன்றுபரந்
தாரமுதங் கொப்புளிக்கு மல்குலாள் - சோர்வுதர

உருo. வன்போர் புரிபொருவின் மன்மதன்ற னூலினுக்குப்
பொன்போ லுரையறிந்து பூரிப்பா - ளென்பிறவி

உருக. யெண்ணேப் பறித்தெறியு மீசன்போன் மாலானுர்
கண்ணேப் பறித்தெறியுங் காட்சியாள் - வண்ணத்

---

உசo. துள்ளி முத்தம் - நீர்த்துளியாகிய முத்தத்தை.

உசச. நாண் - நாணம், நாணி. உசரு. தளம் - சேனே.

உசசா. பாரம் - கனம், பிறருடைய வருத்தம்.

உசஎ. "இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு, நோய்நோக்கொன் றந்நோய் மருந்து" (கoகக) என்னும் திருக்குறளே இங்கே அறிக.

உசஅ. "பாலொடு தேன்கலந் தற்றே" என்பது திருக்குறள், ககஉக.

உருo. பூரித்தல் - நிறைத்தல்.

உருக. மாலானுர் - திருமால், மயக்கமுடையவர்.

உருஉ. திருமுகத்தெய் வீகநிறச் செந்தா மரையு
மருமுகக்குங் கூந்தனிற வண்டுங் - கரியவிழி

உருஙு. யார்ந்தநீ லோற்பலமு மாம்பல்வாய்க் கிஞ்சுகமுஞ்
சார்ந்த திருநிறத்துச் சண்பகமும் - பூந்தரள

உருச. மாலை முலைக்கோங்கும் வாய்ந்த நகைத்தளவுங்
கோல மினிய கொழுங்குமிழு - நூலினிடை

உருரு. வல்லியுஞ் செங்கை மலர்க்காந் தளுஞ்சரண
பல்லவமு மற்றெவையும் பார்த்தருளி - நல்லவர்பாற்

உருசு. போது திரு வுள்ளத்துப் புட்பவனக் கோயிலா
ரீதுமொரு புட்பவன மென்றெண்ணக் - கோதகல

உருஎ. மேய திருவழகின் மெய்யு மவயவமுந்
தூய நிறத்திற் றுலங்குவாள் - சாயலிய

உருஅ. லொத்த பருவத் துயிர்ப்பா வையர் சூழச்
சித்திரமா மண்டபத்திற் சென்றிருந்து - முத்தமுலை

உருகூ. விம்மநையு நுண்ணிடையாள் வெண்முத்த மிட்டிழைத்த
வம்மனை வாங்கியெறிந் தாடவவை - தம்ம

உசூ0. திருமுகச் செவ்விதிரு டத்திகழ்விண் டிங்கள்
வருவதுவும் போவதுவு மான - விருகை

உசூக. வனச மலர்மாறி மாறிவிளை யாடு
மினியகளி யன்னங்க ளென்னப் - புனைகுழற்குத்

உசூஉ. தோற்ற முகிறிறையாத் தூமுத்தின் பந்துநிரை
போற்றிவர விட்ட புதுமையென - வேற்றதனைக்

உசூஙு. கொள்ளா தெடுத்தெறியுங் கொள்கையென விண்முகில்பின்
றள்ளாது மீளத் தருவதென - வள்ளல்பாற்

உசூச. றூதுவிடு மன்னமெனத் தொல்லையனங் காணுத
நாதனென மீளு நலமென்ன - மாதரசி

---

உருஙு. கிஞ்சுகம்-முண்முருங்கை. நிறமாகிய சண்பகம்.

உருச. தளவு - முல்லை. நாசியாகிய குமிழம்பூவும்.

உருரு. பல்லவம் - தளிர்.

உருஉ - சு. இக்கண்ணிகளில் மங்கையைப்புட்பவனமாக உருவகித்திருக்கின்றார்.

உருஎ. நிறத்தின் - நிறத்தோடு. சாயல் - மென்மை. இயல் - நடை.

உருகூ. தோழியரையும் உளப்படுத்தி, 'தம்ம' என்றார்.

உ௬௫. யம்மானை யேந்துகரத் தம்மானை யேபாடி
யம்மானை யாடு மளவிலே - பெம்மான்சூழ்

உ௬௬. காராழித் தேர்முதுகு காட்டக் கதிர்வெய்யோ
னோராழித் தேரொதுங்கி யோட்டெடுப்பக் - கூராழி

உ௬௭. பாதலக் கங்கை படியநெடுங் கூவிரம்போய்
மீதலக் கங்கை மிசைப்பொங்கப் - போதருதேர்

உ௬௮. மேல்வெண் டுகிற்கொடிகள் விண்ணஞ் சுரநதியின்
பால்வெண் டிரைபோற் படிந்தாடச் - சேல்கொண்

உ௬௯. டுருக்குந் திருக்க ணுமையம்மை பாகத்
திருக்குந் திருப்பூவ ணேசன் - றிருக்கொன்றை

உ௭௦. மாலை யழகன் வரும்பவனி தானுரைக்கும்
வேலைதிரு வம்மனைகை விட்டெறிந்தாள் - சேலை

உ௭௧. யிடைக்கு ளிறுக்கி யெழுந்தாணற் றுயர்
பிடிக்கப் பிழைத்துப் பெயர்ந்தா - டடுக்குஞ்

உ௭௨. செவிலியர்க்குந் தப்பித் தெருவிற் புகுந்தா
ணவிலியற்கை வாசமலர் நங்கை - சிவபிரான்

உ௭௩. றெய்வத் திருமார்புந் திண்டோளும் பொன்னனையாள்
கைவைக்குங் கோலக் கபோலமுஞ் - சைவத்

உ௭௪. திருநீறு சண்ணித்த தெய்வச்செம் மேனி
யருணீர்மை குன்று வழகும் - பெருவாழ்வு

உ௭௫. பெற்றதுபோற் கண்டு பெரிதிறைஞ்சிக் கண்பனிப்ப
முற்றுமுடல் பூரிக்க முன்னின்று - நற்றவர்சேர்

---

உ௬௫. அந்த மானை ஏந்திய திருக்கரத்தையுடைய அம்மான் - சிவபெருமான்.

உ௫௯ - ௬௫. இவ்வடிகளில் மங்கை அம்மானை யாடுதல் கூறப்படுகின்றது. முத்தாற்செய்யப்பட்டனவாதலின், அம்மானைக்குத் திங்களும் அன்னங்களும் முத்தி பந்தும் உவமை கூறப்பெற்றன.

உ௬௫ - ௬. காராழி சூழ்தேர் - கரியகடல்சூழ்ந்த பூமியாகிய தேர்.

உ௬௭. கூவிரம் - தேரின் மேன்மொட்டு. 'கூவிரிபோய்' என்றும்பாடம்; "கூவிரியால் விண்விரியக் கூரா ழிகள்பதிந்து, பாவிரி சேடன் படம்விரிய" என்பது தேவையுலா, ௩௦௪.

உ௭௨. இயற்கைவாசம் - இயல்பாகவேயுள்ள நறுமணம்; வாசம் - வசித்தலுமாம்.

உ௭௪. சண்ணித்த - பூசிய; "மெய்யெல்லாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் றடொழாதே" திருநா. தே. ஆரூர்.

உஎசு. விண்ணூர்ந்த வெள்ளிமலே மேலிருக்குஞ் செந்தேனுக்
கண்ணூர்ந்து பார்த்து ளயர்வுற்ரு - டண்ணூர்

உஎஎ. விதுக்குடி யேறுசடை வேதியன் மோகம்
புதுக்குடி யேறுநெஞ்சு பூண்டாண் - மதுக்குமிழி

உஎஅ. செற்றிய வெண்டரளச் செங்கனிவாய் நெஞ்சத்து
ஞுற்றதுயர் பாங்கியருக் கோதினுண் - மற்றவரும்

உஎகூ. பொன்னே கிளியே புதுமயிலே யன்னமே
மின்னே மதன விசயமே - யன்னேக்

உஅ௦. கொடியார் தடுத்த கொடுஞ்சகுன மீதென்
றுடனே குயிலுக் குரைத்தார் - மடவரலு

உஅக. மற்றதுமெய் யென்று மயங்கி யறிவழிந்து
பொற்ருெடி வீழப் புலம்புற்ருள் - முற்று

உஅஉ. முரியார் கடைக்கணித்த தூங்குவட் கோ வேட்கோ
தெரியா தெனவயிர்க்கச் சென்ருர் - பொருவேண்

உஅங. மதுவிருந்த மென்சாப வாளியின் வாய்க்குப்
புதுவிருந் தாயினுள் பூவை - மதியா

## மடந்தை.

உஅச. ரினத்தைப் பொருவே ளிரதிமேல் வைத்த
மனத்தைத் திருப்பு மடந்தை - வனத்தவகி

உஅரு. லாவி முடித்திளஞு ராவி முடிக்கவெனச்
சீவி முடித்த திருக்குழலாள் - பூவுலகி

உஅசு. லாற்றுவன் காமுகர்த மாயுணு ளெண்ணியெண்ணிக்
கூற்றுவன்பார்க் கப்பார்க்குங் கூர்விழியாள் - சாற்றரிய

உஅஎ. கைசிவக்கக் காமவேள் கண்சிவக்க வாடவர்த
மெய்சிவக்க வாய்சிவக்கு மெல்லிதழாண் - மொய்முனிவர்

---

உஎஎ. விது - பிறை.

உஅ௦. கொடியார் - கொடுமையை யுடையார், காக்கை. 'தடுக்குஞ்செவி லியார்' என்ருர் முன்; உஎக - உ. காக்கைதடுத்தாற் செல்லலாகாதென்பது விதி; "வடித்தெடுத்த வேற்கண் மணியிரண்டு கொண்ட, கொடித்தடுத்தா லாரே குவார்" (தமிழ்நா) என்பதிலும் இச்சிலேடைப் பொருளமைந்திருத்தல் காண்க.

உஅஉ. உரியார் - உடையார். அயிர்க்க - சந்தேகிக்க.

உஅங. மதுவிருந்த சாபம் - கரும்புவில்.

உஅரு. ஆவி - புகை, உயிர்.

உ அ அ. சாபம் பறக்கத் தவம்பறக்க மால்பிறக்கச்
சோபம் பெறப்பிறக்குஞ் சொல்லினுள் - கோபமதன்

உ அ கூ. போர்வளர நாணோசை போய்வளரப் பேராசை
வேர்வளர மேல்வளரும் வெம்முலையா - டேர்மலயக்

உ கூ ௦. கால்வளைய வேள்சிலைவன் கைவளைய வாடவரை
மால்வளையப் போய்வளையும் வாணுசுப்பாண் - மேல்வருமன்

உ கூ க. புள்ளூற வாசைகிடந் தூற்றூற வாயூற
வள்ளூ றமுதூறு மல்குலா - டுள்ளூவிழி

உ கூ உ. சுற்றமனஞ் சுற்றமனந் தூயோர்க்கு மாசைதலை
சுற்றவுடை சுற்றுந் துடையினுள் - வெற்றிமதன்

உ கூ ௩. றேர்நடக்க மூன்றுலகுஞ் செங்கோ னடக்கமிகும்
போர்நடக்கத் தானடக்கும் பொன்னடியாள் - சீர்நடக்குந்

உ கூ ச. தெண்ணிலா முற்றத்திற் சென்றிருப்ப வோர்விறலி
யெண்ணிலா நேயத் தெதிர்நின்று - கண்ணிலான்

உ கூ ரு. கண்பெற்ற தென்னமதன் கைகுவிக்குந் தெய்வமே
மண்பெற்ற செல்வ மடந்தையே - பெண்பெற்ற

உ கூ சு. பேறே யெனவாழ்த்தப் பெண்ணரசி கொண்டாடி
வீறு ரிசையின் விறலியே - யாறூர்

உ கூ எ. திருக்கங்கை வார்சடையார் தென்பாண்டி நாட்டி
லிருக்குந் தலங்கள்பா டென்னப் - பெருக்கந்

உ கூ அ. திகழ்பூ வுலகிற் சிவலோக மென்னப்
பகர்கூட லாலவாய் பாடி - மிகமால்

உ கூ கூ. பிறிக்கு மடியார் பிறவிக் கருவேர்
பறிக்கும் புனவாயில் பாடிக் - குறிக்குமால்

---

உ அ அ. சோபம் - க்ஷோபம் (கலக்கம்); இரத்தத்தைக் குறைக்கும் ஒருவகைநோயுமாம்; "கோப மதனுலே குறையுயிருங் கொள்ளை கொள்ளுஞ், சாப மத னுலே தயங்கினேன் - சோபமனத்து" (வருணகுலா. சசச) என்பதனு லுணர்க.

உ அ கூ - கூ ௦. தேர் மலயக்கால் - மன்மதன்தேராகிய தென்றல்.

உ கூ க. அள்ளூறு - மிக்கூறுகின்ற.

உ கூ சு. வீறு - வேறொன்றற்கில்லாத அழகு.

உ கூ எ - ௩ க க. இக்கண்ணிகளிற் பாண்டிநாட்டுச் சிவஸ்தலங்கள் கச-ம் கூறப்பெற்றுள்ளன.

உ கூ அ. "புத்திதரும் பூவுலகிற் சிவலோகம்" திருவிளை. தலவிசேட. உக.

உ கூ கூ. பிறிக்கும் - பிரிக்கும்.

௩௦௦. சங்கந் திகிரி தணந்துமழு மானெடுக்கு
நங்கள்குற் றால நகர்பாடித் - தங்கொருபாற

௩௦௧. பெண்மைத் திருக்கோலப் பெம்மா னினிதுறையு
முண்மைத் திருவாப்ப னூர்பாடித் - திண்மையற

௩௦௨. வாட்டும் பிறவி வழிமறித்து ஞானவழி
காட்டுந் திருவேட கம்பாடி - நாட்டில்

௩௦௩. விரவுதிரு வெண்ணீற்றின் மெய்யன்பர் கூட்டம்
பரவுதிரு நெல்வேலி பாடிப் - புரவுமுனே

௩௦௪. சேர்திருவி ராகவன்முன் சேனையுடன் கண்டுதொழச்
சார்திருவி ராமேச் சரம்பாடி - யேர்தருபொற்

௩௦௫. கொம்பரனு டானையொரு கூறிலங்குங் கோலத்து
நம்பரனு டானை நகர்பாடி - வம்பர்

௩௦௬. புரங்குன்ற வாணகைசெய் பொன்மலைவிற் செல்வன்
பரங்குன்ற மாநகரம் பாடி - யுரங்கொள்

௩௦௭. விடைக்குஞ் சரமுகைப்பார் வீற்றிருக்கக் காணி
படைக்குந் திருச்சுழியல் பாடிக் - கிடைக்குமகத்

---

௩௦௦. திருக்குற்றாலத்தில் அகத்தியமுனிவரால் திருமால் சிவபெருமான் வடிவம்பெற்றனர்; இதனை, "முறுகுவலம் புரிக்கரத்து மான்குறுகப் பெரிய துழாய் முடியின் மீதே, சிறியமதிக் கலைகுறுகத் திலகநுதல் விழிகுறுகச் செழும்பூண் மார்பி, னிறை யரவப் பணிகுறுக நிகிலவுல கமுநிறைந்து நீண்ட மேனி, குறுகுகுறு கெனப்பரவித் திருவடிக்கீழ்க் குறுமுனிவன்குறுகுங்காலை", "தவம்பெருக வறம்பெருகப் பொருள்பெருகத் தெருள்பெருகச் சைவமோங்கிச், சுவம்பெருக மனுநீதித் துறைபெருக நிறைபெருகச் சுருதிவாய்மை, நவம்பெருகச் சரியாதி சதுட்டயங்க ணனிபெருக ஞால மெல்லாஞ், சிவம்பெருகக் குறுகியருள் பெருகினான் குற்றாலத் தேவ தேவன்" (திருக்குற்றலப். திருமால் சிவ. ௧௪௨ - ௩) என்னும் அருமைச் செய்யுட்களாலுணர்க. இக்கதை, கந்தபுராணம், திருக்குற்றாலப் படலத்துமுள்ளது; "மன்றி னருகு மலர்த்துழாய் நாறுமிடங், கொன்றை கமழ்வித்த கோத்தவனும்" (ஏகாம்பர. ௬௧), "அலர் துழாய் நாறு மகன்றளியைக் கொன்றை, மலர்துழாய் நாறவைத்த மானும்" திருவிடை. ௨௪௫.

௩௦௫. கொம்பர் அன்னாள்தான் - உமாதேவியார். ஐ ஒருகூறு - அழகிய ஒருபாகத்தில்.

௩௦௭. விடைக் குஞ்சரம் - இடபமாகிய யானையை. காணி - உரிமை; "படர் சடையர் காணியெனலாம்... .....மயிலாடுதுறையே" (திருஞான. தே.) அகம் - மனம்; மகமெனப்பாடங்கொண்டு யாகமென்றுங் கொள்ளலாகும்.

ருoஅ. தாசையுடைச் சிற்சபையி லையன் றிருச்சிலம்பி
னோசையுடைத் திருப்புத் தூர்பாடித் - தேசுநலந்

ருoகூ. தாங்குதிருத் தேர்வீதிச் சைவா கமம்வேத
மோங்குதிருக் கானப்பே ரூர்பாடி - வாங்குந்

ருகo. தனிக்கொடுங் குன்றமதன் றன்னை யெரித்தார்
பனிக்கொடுங் குன்றநகர் பாடித் - தொனிக்குமறைப்

ருகக. பாவணம் பாடும் பரமன் றிருக்கோயிற்
பூவணம் பாடும் பொழுதிலே - நாவணங்கு

ருகஉ. நாதன் புதல்வர் நவினுன் மறைபாடக்
கீத விசைகின் னரர்பாடக் - கோதிலாச்

ருகரு. சூழிசை வீணைகொடு தும்புரு நாரதர்தா
மேழிசை ராக வியல்பாட - வாழ்முனிவர்

ருகச. பன்னியர் பல்லாண்டு பாடத் தருநாட்டுக்
கன்னியர் தேவகா னம்பாட - வின்னிசையாற்

ருகரு. றெய்வப் புலமைத் திருமு தலிமூவர்
சைவச் சுருதித் தமிழ்பாட - வுய்விக்குஞ்

---

ருoஅ. தாண்டவமேழனுட் கௌரீதாண்டவத்தைத் திருப்புதூர்ச் சிற்சபையிற் பரமசிவன் அம்பிகைக்குக் காட்டியருளினர்; இது, திருப்புத்தூர்ப் புராணம், கௌரீதாண்டவச் சருக்கத்தால் தெரிகின்றது; "பாண்டிபதி னுலின் மிக்காப் பண்ணடமே ழிற்கௌரி, தாண்டவஞ்செய் சிற்சபையிற் றங்கினேன்" என்பது, திருப்புத்தூருலா. ருருஎ.

ருoகூ. திருக்கானப்பேர் - காளையார்கோயில். வாங்கும் - வளைக்கும்.

ருகo. தன் இக்கொடும் குன்ற - தன்னுடைய கரும்பு வில்லோடும் குறைய. கொடுங்குன்றம் - பிரான்மலை.

ருகக. பாவண்ணம் - பாக்களின்வண்ணம். நா அணங்கு - கலைமகள்.

உகூஅ - ருகக. இக்கண்ணிகளிற் பாண்டிநாட்டிலுள்ள பதினுன்குதலங்களும் திருப்பதிக்கோவையிலுள்ள முறைப்படியன்றி, "கூடல் புனவாயில் குற்றால மாப்பனூ, ரேடகநெல் வேலி யிராமேச - மாடானை, தென்பரங்குன் றஞ்சுழிய றென்றிருப்புத் தூர்கானை, வன்கொடுங்குன் றம்பூ வணம்" என்னும் பழைய வெண்பாவிலுள்ள முறைப்படியே அமைந்துள்ளன.

ருகக - உ. நாஅணங்கு நாதன் - பிரமன்; அவன்புதல்வர் - பிருகு முனிவர் முதலியோர்.

ருகச. பன்னியர் - பத்தினிமார். தருநாடு - தேவருலகம்.

ருகரு. திருமுதலிமூவர்=மூவர்முதலிகள் - திருஞானசம்பந்தர் முதலிய மூவர்; "மூவாத பேரன்பின் மூவர் முதலிகளுந், தேவாரஞ் செய்த திருப்பாட்டும்" (ஏகாம்பர. எஅ) என்றார்.

௩௧௬. சேணுலவு தெய்வத் திருநீல கண்டயாழ்ப்
பாணர் தமிழ்மாலைப் பண்பாடப் - பூணரக்கன்

௩௧௭. கைந்நரம்பிற் பாடக் கருணைபுரி வள்ளலார்
மெய்ந்நிரம்பு மாமறுகின் மேவுதலுஞ் - சொன்னிரம்பு

௩௧௮. பண்ணு ரிசைவிறலி பாடுந் தலமெல்லாங்
கண்ணாரக் கண்ட களிகொண்டாள் - பெண்ணு

௩௧௯. ரமுதமெதிர் சென்றுசெம்பொ னுலத்தி காட்டிக்
குமுத மலர்மலர்வு கொண்டாள் - விமலரே

௩௨0. யென்று ளுமக்கபய மென்றுள்கண் ணீர்ததும்ப
நின்றாணின் றுடனக்கு நீராளுங் - குன்றாளு

௩௨௧. மின்னிறத்த கொன்றையந்தா ரீந்தனரோ வென்றயிர்க்கப்
பொன்னிறத்தை யீந்தரனுர் போயினர் - பின்னொருத்தன்

௩௨௨. போடுங் கணைநுழைந்த புண்வழியிற் றென்றலூ
டாடுந் துயருழந்தா ளாங்கொருத்தி - சேடன்

அரிவை.

௩௨௩. பகைகொண்டு பண்டு விரித்த படம்போ
லகல்கின்ற வல்கு லரிவை - யுகிர்கொண்டு

௩௨௪. முன்னொருகோ பத்தான் முடியரிந்த சங்கரற்குப்
பின்னொரு கோபம் பெயர்த்துவரி - னன்னவரை

௩௨௫. யேவர் தடுப்பரென வெண்ணி யயன்பயந்து
தேவர் பெருமான் திருவுள்ள - மாவதற்கா

---

௩௧௬. தமிழ்மாலைப்பண் - தேவார இசை. அரக்கன் - இராவணன்.

௩௧௭. மெய் - உண்மை, தரிசிப்போருடைய உடம்புகள்.

௩௧௮. 'விறலி' என்றது, உ௯௪ - ஆம் கண்ணியிற்கூறிய விறலியை. 'பாடுந்தலம்' என்றது உ௯௮ - ஆம் கண்ணி முதலியவற்றிற் கூறியவற்றை. ஆர - குறைவின்றி நுகர; "ஏதிலா ரரத் தமர்பசிப்பர்" திருக்குறள். அ௩௭.

௩௧௯. குமுதமலர் மலர்வுகொண்டாள் - வாய்திறந்தாள்.

௩௨0. அபயம்-அடைக்கலம். நீராள் - கங்கை. குன்றாள்-உமாதேவியார்.

௩௨௧. இன்நிறத்த - இனிய நிறத்தையுடைய. பொன்னிறம்-பசலைநிறம். ஒருத்தன் - மன்மதன்.

௩௨௨. ஊடாடும்-உள்ளேசென்று துன்புறுத்தலா லுண்டாகிய.

௩௨௩. பகைகொண்டு - வாயுதேவனிடம் விரோதங்கொண்டு.

௩௨௬. மின்னைத் திரட்டி மிகப்பிழிந்து சாம்புநதப்
பொன்னை யுருக்கிப் புடமிட்டுப் - பின்னையொன்றாய்க்

௩௨௭. கூட்டிப் பிடித்துக் குழைத்துமதி நுட்பமெலாங்
காட்டித் தனித்திருந்து கைவருந்தப் - பூட்டியமு

௩௨௮. தூறு பருவத் தொருபெண் ணுருவாக்கிக்
கூறு மழகைக் குடியேற்றி - வீறு

௩௨௯. நலமுற்ற பெண்க ணலத்திற் றெரிந்து
திலமத் தனையெடுத்துச் செய்த - நிலைபெற்ற

௩௩௦. பிள்ளைக் குதலைமொழிப் பெண்ணழகு மிவ்வழகுக்
கெள்ளத் தனையு மிலையென்ன - வுள்ளத்திற்

௩௩௧. கங்கை வெதும்பமலைக் கன்னி கலங்கமற்ற
நங்கையர் சங்கையிலா நாணெய்தத் - திங்களணி

௩௩௨. முக்கணனார் மேனி முழுவதுங் கண்வேண்டு
மிக்கன் னியைப்பார்க்க வென்றுரைக்க - வக்கணமே

௩௩௩. வண்ண மலர்வேளும் வாகை தரிக்கவெங்கள்
கண்ணுதன்முன் விட்டனைய காட்சியா - ளெண்ணிறந்த

௩௩௪. பாங்கியர் நிற்கவுயிர்ப் பாங்கி யுடனேறி
யோங்கிய செய்குன்றி னுள்ளிருத்தி - யாங்கவட்குத்

௩௩௫. தென்னார் செழுங்களபச் சேறணிந்தா டாணணிந்த
பொன்னா பரணமெலாம் பூட்டினாண் - மின்னுடன்

௩௩௬. பொற்பூர் சீரத்தைப் புல்லி யகமகிழ்ந்தாள்
கற்பூர தாம்பூலங் கைக்கொடுத்தாள் - பிற்பாடென்

௩௩௭. னூனு ருயிர்நீயென் னுள்ளக் கருத்தெல்லா
மானே யறியாயோ மற்றென்ன - யானறியப்

---

௩௨௯. திலம் அத்தனை - எள்ளின் அவ்வளவு.

௩௩௦. பெண் - திலோத்தமை. ௩௩௧. சங்கை - அளவு.

௩௩௧. வெதும்பாதவள்வெம்மையுறக் கலங்காதவள் கலங்க.

௩௨௮. குடியேற்றி (௩௩௩) விட்டனைய காட்சியாள்.

௩௩௫. தென் - அழகு; தெற்குமாம். களபச் சேறு-கலவைச்சாந்து.

௩௩௬. "கற்பூர தாம்பூலங் கைக்கொடுத்தேன்" என்பது, வருண குலாதித்தன்மடல், ௪௧௨. பிற்பாடு - பின்னுக; "பெண்ணணி கோலம் பெயர்த்தபிற் பாடு" சிலப். ௧௩ : ௧.

௩௩௮. போமோசொ லுன்கருத்தைப் பூவணங் கோயில்கொண்டார்
தாமே யறியத் தகுமென்ன - வாமே
௩௩௯. யவரறிவ துன்னைக்கொண் டல்லவோ வென்றுட்
கெவரறிவுந் தாமறியு மீச - னவிர்சடையான்
௩௪௦. பின்னழகுக் கொப்புரையாப் பேரம் பலவாணன்
றன்னழகுக் காருமொவ்வாத் தானுவீங் - குன்னழகு
௩௪௧. பார்க்கவே நாளைப் பவனிவரு மென்றளவிற்
கார்க்குழல்கேட் டுள்ளங் களிப்பெய்தித் - தீர்த்தன்மே
௩௪௨. லாசை யினும்விரிவா வல்குல்பூ ரிப்பமுலை
வீசிய விண்ணை வெளியடைப்ப - மாசகலுங்
௩௪௩. கன்னி புளகமுறுங் காலையின் மாலைபெற
மன்னிய காமம் வளர்ந்தேற - வந்நேர
௩௪௪. மாலைவரக் கண்டாண் மயங்கி மறலிநிறஞ்
சால முழுச்சிவப்போ தானென்றாள் - காலரவம்
௩௪௫. போலவரக் கண்டு பொதியின் மலைப்புலியை
வாலுருவி விட்டான் மதனென்றாள் - பாலருவி
௩௪௬. விட்டதுபோல் வெண்ணிலவு வீசுவதை வெண்ணெருப்பாச்
சுட்டநெருப் பேதென்று சொல்லினண் - முட்டக்
௩௪௭. குயில்வாய் விடமிருப்பக் கூற்றுதைத்தா ரென்னே
வியல்வேலை நஞ்சுண்ட தென்றாள் - செயன்மாரன்
௩௪௮. றுழை மலரணியாத் தன்பகைவன் மேலெய்யா
தேழையெனை யெய்யுமதி யென்னென்றாள் - சூழ

---

௩௩௮. ஆமென்பது உடன்பாட்டைத் தெரிவிக்கும் ஓரிடைச்சொல்.

௩௪௦. அழகுக்காருமொவ்வாதானென்பது இத்தலத்தில் நாயகருடைய திருநாமம்.

௩௪௧. தீர்த்தன் - தேவன்.

௩௪௩. புளகம் - மயிர்சிலிர்த்தல். காலைமாலை யென்பவற்றிற் சிறு பொழுதுகளின் பெயர் தொனிக்கின்றன.

௩௪௪. கால் - தென்றற்காற்று.

௩௪௫. புலியை வாலுருவிவிடலென்பது ஒருபழமொழி; ''வயப்புலியை வாலுருவி விடுகின் றீரே'' என்பது, பாரதம், சூதுபோர்ச்சருக்கம், ௨௬௫.

௩௪௬. ''அலைவாய் விடத்தி னுடன்றோன்றி யாவி கவரும் வெண்ணெருப்பே'' (நைடத, சந்திரோ. ௩௭) என்பர்.

௩௪௯. வுருகு மினத்தோ டுயிர்த்துயிர்த்து நெஞ்சஞ்
சருகுபட வாடித் தளர்ந்து - முருகிதழித்

௩௫௦. தாமக் கடவுடிரு வஞ்செழுத்தே தான்புணையா
யாமக் கடனீந்தி யேறினாள் - சோமக்

௩௫௧. கடவுட் சடாமவுலி காலைவரு மென்றென்
றடர்பொற் பணிதிருத்தி யாடை - யிடையிறுக்கி

௩௫௨. மின்னனையா ளில்கடந்து வீதிவந்தா ளவ்வளவிற்
பொன்னனைய யாண்மனைக்குப் போயினேன் - றன்னனைய

௩௫௩. நற்றேர் வரக்கண்டா ளாளைவரு மென்றுரைத்த
குற்றேவற் பாங்கியைமுன் கும்பிட்டாள் - பிற்றேவர்

௩௫௪. தேவனைக்கும் பிட்டா டிருத்தோ ணலங்கண்டாள்
காவிமைக்க ணாற்பருகிக் காமுற்றாண் - மேவுசெக்கர்

௩௫௫. மாலைத் துயரொழிய வஞ்சி வலக்கண்ணாங்
காலைக் கதிர்கண்டு கைதொழுதா - ளாலித்துப்

௩௫௬. பையவருந் தென்றற் பகைதீர வெம்பெருமான்
செய்யதிரு வாபரணஞ் சேவித்தாண் - மையற்

௩௫௭. கரணும் புயத்தானை யம்புலிப்போர் நீங்கச்
சரணும் புயத்தலரிற் றாழ்ந்தாண் - முரணூர்

---

௩௪௯. இதழி - கொன்றை.

௩௫௦. யாமக்கடல் - இராத்திரியாகிய கடல். இவள், திருவைந்தெழுத்தே தெப்பமாக யாமக்கடலை நீந்திக்கடந்தாள்; இது, பஞ்சாக்கரத்தையே துணையாகக்கொண்டு கடலைக்கடந்த வாகீசருடைய அருஞ்செயலை நினைப்பிக்கின்றது.

௩௫௩. பாங்கி நாளைவருமென் றதை ௩௪௧ - ஆம் கண்ணியிற்காண்க.

௩௫௫. வலக்கண்ணாம் காலைக்கதிர் - சிவபெருமானுடைய வலக்கண்ணாகிய சூரியனை. ஆலித்து - முழங்கி.

௩௫௬. திருவாபரணம் - பாம்பு. பாம்பு காற்றை உண்ணுமென்றல் ஈண்டு அறியற்பாலது; "வாயுவான பஞ்சடைத்துத் திருமா றுயிலு மலரணையே" (சேவ்வந்திப், திருமலை. ௩௦); "மணியுடைநும் பூணுணவு மாற்றும் விரத, நணியனகொ றென்ற னடுக்கும்" (திருவிடை. ௩௧௬) என்றார்; மையற்கு - மயக்கமாகிய பகையைத் தடுத்தற்கு.

௩௫௭. அரணும் புயத்தானை - காவலாகிய திருத்தோள்களையுடையவரை. தக்கன்யாகத்திற் சந்திரனைச் சிவபெருமான் திருவடியால் தேய்த்தது இங்கே உணரத்தக்கது.

ருடுஅ. வரிக்குயிலுக் கஞ்சுதொழின் மாற்றப் பெருமான்
றிருக்கரத்தைக் கண்டுதரி சித்தாள் - கருப்புவிற்கை

ருடுகூ. பூணு மதனடத்தும் போர்தவிரப் புட்பவன
வாணனுதற் கண்கண்டு வாழ்த்தினாள் - பாண்மிழற்றும்

ருசுo. வண்டார் குழனெருநல் வந்தபகைக் குப்பகைதான்
றண்டா வரனுருவிற் றுன்கண்டாள் - கண்டோமென்

ருசுக. றுனந்த மூழ்கி யறிவுவரு முன்றிருத்தேர்
தானந்த வீதியொரீஇச் சார்ந்ததான் - ஞானந்தான்

தெரிவை.

ருசுஉ. றேற்றமிகப் பேரின்பந் தேடுமெவ ராசைக்கு
மாற்றுமருந் தென்ன வருந்தெரிவை - சாற்றயன்மால்

ருசுரு. கற்பத் திருணிலவோ காய்டகலோ வென்னமிகப்
பொற்புற் றிருள்பழுத்த பூங்குழலாள் - கற்பத்துச்

ருசுச. சீலக் கடல்குளமோ சிற்றோடை யோவெனநீ
ணீலப் பெரிய நெடுங்கண்ணாள் - கோலமுந்நீர்க்

ருசுடு. கண்ணற் பவளங் கறுப்போ விளர்ப்போவென்
றெண்ணச் சிவந்த விதழினாள் - விண்ணமுதங்

ருசுசு. காறி யுமிழ்புளிப்போ கைப்போவென் றிந்திரன்வா
யூறிவரத் தித்திக்கு மொண்சொல்லாள் - வீறியபொன்

---

ருடுஅ. தக்கன்யாகத்தில் இந்திரன்கொண்ட குயில்வடிவின் இறகைச் சிவபெருமானது திருக்கரம் வெட்டினமையின், குயிலானுண்டாகும் வருத்தத்தைப் போக்கிக்கொள்ளுதற்கு இவள் அதனைத் தரிசித்தாள்.

ருடுகூ. மன்மதனை எரித்ததுபற்றி நெற்றிக்கண்ணை வாழ்த்தினாள்; 'காமப் பகையையடர் கண்ணாளா' என்பர் பின்னும்; சருஅ.

ருடுரு - கூ. இக்கண்ணிகளுடன் "நெற்றிமீது கண்படைத்த வும்மை மார னெய்வனோ, நீரணிந்த வரவிருக்க நெடியதென்றன் முடுகுமோ, வெற்றி யான தாளிருக்க மதியமும்மை நலியுமோ, விரவுகங்கு லும நகண்ணின் வெயி லின்முன்பு நிற்குமோ, கற்றையான குழலியெந்த வுதவிகொண்டு பகைவெலுங், கருணைகூர்தெ னருணைமேவு கலியுகத்து மெய்யரே, செற்றலார்கள் புரமெரித்த புழுகணிப்ர தாபரே,தேவாரயரே சுகந்ததினவசந்த ராயரே" (அருணை க்.டுக.) என்னும்பாடல் ஒப்பிடற்பாலது.

ருசுo. பகைக்குப் பகையென்றது, ருடுரு - ஆம் கண்ணிமுதலியவற்றிற் கூறிய மாலைமுதலியவற்றின்பகையாகிய இறைவன் வலக்கண் முதலியவற்றை.

ருசுக. தேர் வேறு வீதியை அடைந்தது.

ருசுரு. கூந்தலின் கருமைமிகுதியைக் கூறியபடி.

ருசுச - டு. முந்நீர்க்கண்ணுள்ள நல்லபவளம்.

ருசுசு. உமிழ் - உமிழ்வாய்; ஏவல்.

௩சுஎ. மேருச் சிறுபந்தோ மென்கழங்கோ வென்னமிகப்
பாரித் தெழுந்த பயோதரத்தாள் - சீரித்து

௩சுஅ. வாய்ந்த விழையுரலோ வன்றாண மோவெனப்போய்த்
தேய்ந்து சிறுத்தொழியுஞ் சிற்றிடையா - ளாய்ந்தவைய

௩சுகூ. மெல்லாமோர் கையளவோ வில்லேயோ வென்னவிண்மேற்
செல்லா மணிநிதம்பத் தேரினுள் - வில்லேறும்

௩எ௦. பஞ்சி பரலோ படுநெருஞ்சி யோவெனவுள்
ளஞ்சிமுகஞ் சேக்கு மடியினுள் - விஞ்சுபுகழ்

௩எக. சேர்க்குந்தென் பூவைத் திசைபோல யாவரையும்
பார்க்குந் தொறுமயக்கும் பண்பினுள் - கூர்க்கு

௩எ௨. மரிவைப் பருவத் தருட்பூவ ணேசன்
கருணைப் பவனிவரக் கண்ட - பரிசினுற்

௩எ௩. காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரு மயலினுள் - சாலமணந்

௩எச. தைவந்த காவிற் றனித்திருந்தோ ரோவநூல்
கைவந் தவனைக் கடிதழைத்து - மெய்வந்த

௩எரு. பூவண வாணனஞ்சொற் பொன்னனையாட் கன்றளித்த
மாவணக் காதை வகுத்தெழுதி - யோவியத்திற்

௩எசு. காட்டு கெனநிறைபொன் கைக்கொடுப்ப வோர்படத்திற்
றீட்டி யவனவண்முன் சென்றிருந்து - தோட்டலர்மென்

---

௩சுஎ. கழங்கு - கழற்சிக்காய். சீரித்து - பரீக்ஷித்து ; "வச்சிரஞ் சீரிப் பான்போற், பொய்தவன் தலையைக் கொய்தான்" திருவிளை. க: ருஅ.

௩சுஅ. இழை - நூலிழை.

௩எ௦. பரல் - பருக்கைக்கல். சேக்கும் - சிவக்கும்.

௩எக. பூவை-திருப்பூவணம் ; இத்தலத்தில் திசைமயக்கமுண்டென்ப தை, இந்நூல் ககஙு - ஆம் கண்ணியாலும் அதன் குறிப்பாலும் அறியலாகும்; இக்கண்ணி, "தலைவிக்கைந், கோணம்பெறவகுத்த கோயில்போ லியாவரையுங், காணுந் தொறுமயக்குங் காட்சியாள்" (ஏகாம்பர. ௩சுக - ௨) என்பதைப் பின்பற்றி வந்தது.

௩எ௩. இக்கண்ணி,"காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்,' (திருக்குறள். க௨௨எ) என்பதை உட்கொண்டது.

௩எச. ஓவநூல் - சித்திரநூல். ௩எரு. ஓவியம் - சித்திரம்.

௩எச - சு. இக்கண்ணிகள், "ஓவியத் துறைகை போய வொருவனை யுருவின் மிக்க, காவல னொருவன் மற்றோர் கன்னிநீ தீட்டு கென்ன" (நைடத, அன்னத்தைக். சு) என்பதை நினைப்பிக்கின்றன.

௩எஎ. போதரசு கையாற்செய் பொன்னனையாய் பொன்னனையாண்
மாதரசு வாழ்பொன் மனையிதுபார் - கோதை
௩எஅ. புலரியிற் போந்து புனல்வைவையை கைமேற்
பலனுய்க்க மூழ்கும் படிபார் - நலனுய்க்குங்
௩எகூ. கண்மணி பூண்டுமனங் காமுறுவெண் ணீறணிந்து
பெண்மணியன் னாளிருக்கும் பெற்றிபா - ருண்மைத்
௩அ௦. தபத்தியானப் பெண்ணரசு தாழ்விலெழுத் தஞ்சுஞ்
செபத்தியானஞ் செய்யுஞ் செயல்பார் - சுபத்தியானஞ்
௩அக. செய்து சிவனைத் திருவர்ச் சனைமுடித்துக்
கைகுவித்து மா திருக்குங் காட்சிபார் - பெய்வளையா
௩அ௨. ளாயத் தொடும்பூவை யங்கணனைச் சேவிக்கக்
கோயிற் புகுந்துநின்ற கொள்கைபா - ரேயத்
௩அ௩. திருத்தஞ்சி லோதி திருமுன்பு சுத்த
நிருத்தஞ்செய் கோல நிலைபார் - நிருத்தம்
௩அச. புரிந்தங்கு நின்றரிதிற் போந்து மனைக்குட்
பரிந்தங் கிருக்கும் படிபா - ரருந்த
௩அரு. முருந்து நகைமனைக்குண் மொய்த்தீண்டிச் செல்லுந்
திருந்துதிருத் தொண்டர் திரள்பார் - வருந்தங்க
௩அசு. ளைய னடியாரை நண்ணி யெதிரிறைஞ்சித்
தூய வமுதருத்துந் தோற்றம்பார் - மேயசிவன்
௩அஎ. றன்னுருவம் பொன்னுருவ மாகச் சமைக்கவிளங்
கன்னி சமைத்த கருவுருப்பா - ரன்னங்
௩அஅ. தொடுத்த கருத்தறிந்து சுந்தரப்பே ரண்ண
லெடுத்தசித்த வேடத் தெழில்பார் - வடித்தவயி
௩அகூ. லொத்தவிழி மாளிகைமு னுற்றொருபால் யோகபட்டச்
சித்தரிறு மாந்திருக்குஞ் செய்கைபா - ரத்தகைமை

---

௩எஎ - அ. போதரசு - பிரமதேவர். புலரி - விடியற்காலம்.

௩அ௩. திருத்து அம் சில் ஓதி - திருத்திய அழகிய சிலவான கூந்தலையுடையாள். திருமுன்பு - சந்நிதியில். சுத்தநிருத்தம் சொக்கமென்றும் வழங்கப்படும் ; சிலப்பதிகாரம் பார்க்க.

௩அரு - சு. முருந்துநகை - பொன்னனையாளுடைய. நாயன் - தலைவர்.
௩அஎ. திருவுருச்சமைத்தற்குக் கம்மியர்களைக்கொண்டு பிடிப்பித்தகரு.
௩அஅ. சுந்தரப்பேரண்ணல் - சோமசுந்தரக்கடவுள். அயில் - வேல்.

௩௯0. கண்டெதிர் சென்றுமலர்க் கால்பணிந்தன் பென்னுமயல்
கொண்டெதிர் நிற்குமவள் கொள்கைபார் - வண்டுளரு

௩௯௧. நெய்ய குழல்வருந்து நின்கருத்தே தென்றெங்க
ளய்யர் முறுவ லரும்புதல்பார் - தையலரி

௩௯௨. காணுத் திருவுருவங் காணுங் கருத்தரவப்
பூணுர்க் குரைக்கும் புதுமைபார் - நீணுகச்

௩௯௩. சித்த ருரைப்படியத் தேமொழியில் விற்கரும்பொ
னத்தனையு முன்புவைத்த வார்வம்பார் - வைத்ததன்மே

௩௯௪. னீற்றைச் சிதறியையர் நேரிழைநீ யித்தையெரி
யேற்றப் பசும்பொன்னு மென்பதுபார் - கோற்றொடியுங்

௩௯௫. கட்டுசடைச் சித்தர் கருதுமுறை யேயெரிபெய்
தட்டகரும் பொன்செம்பொ னனதுபார் - வட்டமுலைக்

௩௯௬. கொம்பனுள் பூவணத்தெங் கோமானை யாணிதீர்
செம்பொனுற் கண்ட திருவுருப்பார் - விம்பவாய்

௩௯௭. வள்ளிமுத்தங் கொள்ளு மகப்பெற்ருேன் மேனியைக்கண்
டள்ளிமுத்தங் கொள்ளுமவ ளன்புபார் - வெள்ளிவெற்ப

௩௯௮. னன்புக் கிளகியவ ளங்கை நகரேகை
தன்பொற் கபோலந் தரித்ததுபார் - வன்பிற்

௩௯௯. பிடித்த விரதப் பெரும்பேறு பாவைக்
கடுத்த விசேட மதுபார் - முடித்தகுழன்

௪00. மாதேயென் ருேவநூல் வந்தோன் வகுத்துரைக்கும்
போதே விரகம் புறம்பொசியக் - காதார்

---

௩௯௧. நெய்யகுழல் - நெய்ப்புற்ற கூந்தலேயுடையாய். அரி - திருமால்.

௩௯௨. கருத்து - கருத்தினை. அரவப்பூண்-பாம்பாகிய ஆபரணம்.

௩௯௩. கரும்பொன் - இரும்பு. ௩௯௬. விம்பம் - கொவ்வைக்கனி.

௩௯௭. வள்ளி - வள்ளிநாயகியார். மக - முருகக்கடவுள்.

௩௭௭ - ௯௯. பொன்னனையாளுடைய நித்தியநியமங்களை முறையே சித்திரத்திற் காட்டுவதாகவுள்ள இக்கண்ணிகள், "மகிழ்வுற்ற வாயமுடன் வண்டரள மாலே, திகழ்சித்ர மண்டபத்திற் சேர்ந்து - மகர, விடங்தோய் விழியங் கெழுதியவை யெல்லாம், நெடும்போது பார்த்தகலா நிற்ப - வடைந்தெவரு, மின்ன திதுவிதுவென் றெங்களுக்குக் காட்டியரு, ளென்ன நடையா யடைவிலென - மின்னிடையீர், வெள்ளி மலேநீங்கி விண்ணேரு மண்ணேரு, முள்ளும் பிரானை யுமையாள்போ-யுள்ளமிகத்,தாங்காத பூசைக்குத் தக்கவிட மீதென்று, நீங்காது நின்ற நிலேபாரீர் - தேங்கமழுங், காவி புடை சூழ்ந்த கம்பா நதிப்புனலிற், பாவை படியும் படிபாரீர் - கோவையித, ழோசையளிக ளுலவம்பி கா

சா௦க. குழையாள் குழைந்தறிவு கொள்ளைபோய் நெஞ்சந்
தழையாமை நின்று சருகாம் - பொழுதிற்
சா௦உ. றிளைத்தவுமை யம்மை திருக்கையால் வைத்து
வளர்த்த தருநிழலில் வாழ்வோன் - கிளைத்துமனப்
சா௦ங. பத்தி மலரவங்காட் பானு வழிபட்டோ
னத்தி மலர வருள்செய்தோன் - முத்தி
சா௦சா. மலரமலர் புட்ப வனத்தான் பவங்கள்
புலரவருந் தேவி புரத்தான் - குலவு
சா௦ரு. நளச்சக்ர வர்த்திகலி நாசஞ்செய் நாத
னிளச்சக்ர வர்த்திபணி யெம்மான் - வளைச்சக்ர

---

வனத்தில்,வாசமலர் கொய்யும் வகைபாரீர்-பேசரிய,வாதி யமர ரறியா வவராக, மாது குவித்த மணல்பாரீர் - கோதை, யணியு மிருளோதி யன்பொடுபூ சித்துப், பணியும் வழிபாடு பாரீ - ரிணையிலிமுன், மேவு புளகமுடன் வெண்ணீறு மெய்க்கணிந்து, தேவி யிருந்த செயல்பாரீர் - பூவிற், கரந்து மழைபொழியாக் காலத்தே கம்பை, பரந்து வருபெருக்கைப் பாரீர் - விரிந்தபுனன், மாகம் புதைய வரப்பண்ணித் தம்மையொளித், தேகம்பர் நின்ற விடம்பாரீர் - தோகை, யரும்புனல்கண் டஞ்சியவ ராகமுறச் சென்று, பரிந்து தழுவியது பாரீர்-புரிந்து, மலைக்கு மகடன் வழிபாடு வந்து, பலித்த பெரும் பேறு பாரீர் - கலப்பொற், றெரிவை யுடனிந்தத் தேமாநிழலிற், பரம னிருந்தவிடம் பாரீர் - பொருவி, றிருக்கைவளை யான்முலையாற் றிண்டோளு மார்பும், பரித்த திருத்தழும்புபாரீர் - விரித்த சடை, யண்ணல் வெளிப்பட்டருள்வரங்கள் பாரீரெ ,றெண்ணும் புதுமை யிவையெல்லாம் - ஒண்ணுதலாள் காட்ட'' (ஏகாம்பர. ஙசுங-அ௦) என்னும் பகுதிகளோடு ஒப்பு நோக்கத்தக்கவை.

சா௦க. 'குழையாள்குழைந்து' என்பது சொல் முரண்.

சா௦உ. இந் நூல் உசு - கூ ஆம் கண்ணிகளின் குறிப்பைப்பார்க்க.

சா௦ங. இறந்த தன்னுடையபிதாவின்என்புகளைக் கங்காநதியிலிடுவதற்கு அவற்றை ஒருகுடத்திலடைத்து வைத்துக்கொண்டு செல்லும் தருமஞ்ஞனென்னும் அந்தணனொருவன் இத்தலம் வந்து மணிகர்ணிகையின் கரையிலிருக்கையில், அவ்வென்புகள் தாமரைமலரும் நீலோற்பலமலருமாயினவென்பர்; இதனை, இத்தலபுராணத்தில், தருமஞ்ஞன்முத்திபெற்றசருக்கத்தாலறிந்துகொள்க. அத்திமலரவென்பதற்குப் பூவாத அத்திமரம் மலரவென்பது மற்றொருபொருள்.

சா௦ங - சா. இந்தவனத்தில் முத்தி யென்னுமலர் மலர்கின்றது. தேவிபுரமென்பது இத்தலத்திற்கு உரிய திருநாமங்களுள் ஒன்று.

சா௦ரு. நளச்சக்கரவர்த்திக்குக் கலியின் துன்பம் இத்தலத்தில் நீங்கியது. இளனென்னுமரசன், தன்பால்வந்த ஆடவர்களை மகளிர்களாகச்செய்யும் இயல்பையுடைய வனமொன்றிற்புகுந்து பெண்வடிவமுற்றுப் பின் சில முனிவர்களுடைய கட்டளைப்படி அசுவமேதத்தாற் சிவபெருமானை உபாஸித்து அவ்வடிவம் நீங்கப்பெற்றமையின், 'இளச்சக்கர வர்த்திபணி யெம்மான்' என்றார்; இதனை, இராமாயணம், உத்தரகாண்டத்தாலுணர்க.

சாOசு. நீளத்தான் காணுத நீளத்தான் றேவிபுக
ருளத்தான் சங்கார தாண்டவத்தான் - கேளொத்தான்

சாOஎ. பூவணத்தெங் கோமான் பொலந்தேர் மறுகணைய
வேவணக்கண் மின்கேட் டெதிர்சென்று - டீவணத்தன்

சாOஅ. றெய்வத் திருமேனிச் செஞ்சோ தியுமுகமுங்
கைவைத்த வீரமழுக் காட்சியு - முய்வித்த

சாOகூ. காவித் திருநீல கண்டமுங் கொன்றையந்தார்
மேவிப் பரிமளிக்கு மெய்ப்புயமுந் - தாவிப்

சாகO. பொழியுங் கருணைப் புனிதநதி பொங்கி
வழியுந் திருக்கண் மலரு - மொழியுமறைப்

சாகக. பண்மணக்குஞ் சீதப் பவளத் திருவாயும்
விண்மணக்குங் கங்கை விரிசடையும் - பெண்மணக்குஞ்

சாகஉ. செம்பாதி யும்போய்த் தெரிசித்தாண் மார்பிருக்கும்
வம்பார் முலைத்தழும்பை வாழ்த்தினண் - மொய்ம்பேறுஞ்

சாகங. சீல வளைத்தழும்பின் சீர்புகழ்ந்து பொன்னனையாள்
கோல நகக்குறியைக் கும்பிட்டா - ணீலமிடற்

சாகசா. றெந்தையை நோக்கி யிதழித் திருப்புயத்தால்
வந்த விரகநோய் மாற்றுதற்குச் - சொந்த

சாகரு. மருந்தறியீர் வேளூர் வயித்தியரென் றங்கே
யிருந்தபரி சென்னே வியம்பீர் - திருந்துகையி

சாகசு. னிற்குந் தொகைவளையை நீர்கொண்டீர் கூடலிலே
விற்குந் தொழின்மறந்து விட்டீரோ - நற்கள்

சாகஎ. வழியுமலர்க் கொன்றைதர மாட்டீர்க்கா ரூரின்
மொழியும் பெயரென் மொழியீர் - பழியஞ்சு

---

சாOசு. நீளத்தான் - திருமால். தேவி புகல் தாளத்தான் - அம்பிகை விரும்பிக்கொட்டுகின்ற தாளத்தையுடையவர்; "தாளவட்டங் கொட்டு கைப்பாணி யொப்பவொரு சப்பாணி கொட்டியருளே" மீனுட்சி யம்மை பிள்ளைத்தமிழ், சப்பாணி, க.

சாOஎ. ஏவணக்கண் - அம்பின் இயல்பையுடையகண். மின் - தெரிவை.

சாகO. மலர் நதியைப் பொழிகின்றதென்றது ஒருவியப்பு.

சாகஉ-ங. முலைத்தழும்பும் வளைத்தழும்பும் காஞ்சிபுரத்தில் அம்பிகை பூசித்தபொழுது உண்டானவை. வம்பு-கச்சு. மொய்ம்பு-தோள்.

சாகரு. வேளூர் - வைத்தீசுவரன் கோயில். வைத்தியர் - வைத்தியநாதர்.

சாகசு. விற்குந்தொழில் - வளையல் விற்குந்தொழில்.

சாகஎ. ஆரூரில்மொழியும்பெயர் - தியாகராசரென்னும் திருநாமம்.

சகஅ. மாட றவிர வறுபத்து மூன்றேமுன்
கூட னகராடல் கூறுவீ - ரோடுகெண்ணீ

சகக. ரூற்றை மறிக்க வுபாயமறி யீர்வையை
யாற்றை மறிக்க வறிவீரோ - சாற்றீரென்

சஉ0. றன்னமுரைத் தாளரனு ராகத் தழகியமின்
றன்னைநினைத் தஞ்சினர் தார்கொடுக்கப் - பின்னைமதன்

சஉக. காவி யொழிந்த கணைகிடக்குந் தூணியெனப்
பாவைகிடந் தாணடந்தான் பைந்தாரான் - பூவை

சஉஉ. யுரிய வுடற்குயிருண் டென்ன வுயிர்த்து
நிரைவளையார்க் கையத்தை நீத்தா - டெரிவைக்

## பேரிளம்பெண்.

சஉங. கடுத்த பருவ மலர்வே ளிரதி
யெடுத்தனைய ளாம்பே ரிளம்பெண் - டொடுத்தமத

சஉச. னீலவம் பொன்றொழிய நின்றநா லம்புசெயுஞ்
சீலமுங்கண் டெவ்வெவர்க்குஞ் செப்புவாள் - சால

சஉரு. வினைநீடு மன்மதவேள் வேதாந்த சாரத்
தனுபோக முற்று மறிந்தா - டனிமூவர்

சஉசு. கானத் திருமுறையைக் கைவிடாள் பண்ணேடும்
பானற் பெருவிழியாள் பாடுவா - ளானையுரித்

சஉஎ. தாரைச் சயிக்கவிரண் டானை தலைகீழாப்
பாரப் பெருந்தவஞ்செய் பான்மைபோல் - வாரென்

சஉஅ. முகபடா நீக்கி முனிந்தா டவர்மே
லிகலிக் கிரிவீ ழிபம்போ - லகமகிழ

சஉகூ. வுந்தி மடுவென் றுரைக்கு மதுபார்க்க
வந்த துணைச்சக்ர வாளம்போன் - முந்தத்

---

சகஎ - அ. பழியஞ்சும் ஆடல்-பழியஞ்சின திருவிளையாடல்.

சககூ. ஆற்றைமறித்தது, பிட்டுக்கு மண்சுமந்ததிருவிளையாடலில்.

சஉக. காவி யொழிந்தகணை - தாமரைமலர் முதலிய நான்கு. பைந்தாரான் - மன்மதன்.

சஉச. கொலைப்பாண மாதலின், நீலமலராகிய அம்பு விலக்கப்பட்டது.

சஉசு. திருமுறை - அடங்கன்முறை. சஉஎ. வார் - கச்சு.

சஉஅ. முனிந்து - கோபித்து.

சஙo. திருப்பனந் தாளிலிங்கந் * திண்கலைச்சிக் காக
விருப்பினுடன் சாய்ந்த விதம்போற் - பருப்பதம்போ

சஙக. லின்னம் பருக்கி யிடைதாங்குந் தாங்காதென்
றுன்னி யதுடார்க்க வுற்றதுபோற் - றன்னைவிழை

சஙஉ. மாந்தருக்கு மோக மகோததியைக் கையணைத்து
நீந்தக் கவிழ்த்தகுட நீர்மைபோ - னேர்ந்தெட்

சஙங. டெதிர்த்துவரு வாரையெல்லா மியாஞ்சயித்தோ மென்ன
மதித்தலுத்துச் சாய்ந்த வகைபோற் - கதித்திடத்திண்

சஙச. கோல்பிடித்த செங்கைக் குடைபோற் றலைகீழா
மால்பிடிக்க நின்ற மணிவரைபோற் - சால்பகல

சஙரு. மட்டுண் டடங்காது வம்பிற் றலையிட்டு
முட்டுண்டு பின்குனியு மூர்க்கர்போற் - கிட்டும்

சஙசு. வளநீல ரோம மணிக்கயிறு பூட்டி
யிளநீ ரிறக்கு மியல்போ - லிளைஞோரா

சஙஎ. லாடி விசையோய்ந் தயர்ந்துவீழ் பம்பரம்போற்
கோடி முகங்கவிழ்ந்த கொங்கையா - ணீடுலகிற்

---

சஙo. சிவநேசம்பூண்ட தாடகையென்னு மங்கையொருத்தி திருப்பனந் தாளிற் சிவலிங்கப்பெருமானை நாள்தோறும் பூசித்துக்கொண்டு வருகையில், ஒருதினம் சாத்துதற்காகப் பூமாலையை இரண்டுகையாலு மெடுத்தபொழுது, கட்டுக்குலைந்து அவளாடை நழுவத்தொடங்கியது ; முழங்கையால் அவ்வாடையை இடுக்கிக்கொண்டு மாலைசாத்துதற்கு முடியாமல் அவள் மிக வருத்தமுற்றனள்; அப்பொழுது அவ்வருத்தம் பொறுமல் அவளன்புக்கிரங்கிச் சிவபெருமான் தமது திருமுடியைவளைத்து அம்மாலையை ஏற்றுக்கொண்டருளினரென்பது அத்தலபுராணகதை. கலையாற் சிறப்பெய்தியதுபற்றி, கலைச்சியென்பது மேற்கூறியதாடகைக்குப் பெயராயிற்றென்பர்; "சிலைச்சிக்கு மதனெரிய விழிதிறந்த திருப்பனந்தாட் சிவனே மாய, வலைச்சிக்கு விட நினையே னும்மையுநான் வயப்படுத்தமாட்டே னந்தோ, குலைச்சிக்கோ ரன்னமின்னுங் காணுத சடைமௌலி குலைந்து போன, கலைச்சிக்குவளைந்ததுவுங் கலையனுக்கு நிமிர்ந்ததுவுங் கண்டேன் தானே" என்னும் பழைய பாட்டில் இவ்வரலாறும் கலைச்சியென்னும் பெயரும் அமைந்திருக்கும் அழகைப்பார்க்க. கலைச்சியென்னும் பெயர் வழக்க முண்மை இப்பாடலாலும் தெரிகின்றது.

சஙக. அது - அந்த இடையை.

சஙச. மால் - கண்ணன். மணிவரை - கோவர்த்தனகிரி.

சஙரு. மட்டு - எல்லை, நறுமணம். வம்பு - வீண்செயல், கச்சு.

சஙசு. உரோமாவலியாகிய மணிக்கயிறு.

---

* 'திண்கலைச்சிக்கற்கா' என்றும் பாடம்.

சரு அ. றிச்கு விசயஞ் செலுத்தி மதனுவம்
புக்க விசிகம் புரைகண்ணுண் - மிக்குலக

சருகூ. நாடுந் திருமா னடனத்தி னுற்றுகைப்புண்
டாடும் படம்போலு மல்குலாள் - கூடிய

சச௦. மேல்வீசு நள்ளிருளின் மேனிதெரி யாதுநிலாக்
கால்வீசும் போதுதெரி காருடல்போ - னன்மாடச்

சசக. செய்யநகர் வேந்தாற் சிறையிற்சின் னாள்கிடந்து
மெய்யிளைத்து மீண்டுவரு மேகம்போற் - சைய

சசஉ. மடந்தை மணவாளன் வாழ்சேதுக் கைதை
குடைந்துவரு வண்டின் குழாம்போன் - மிடைந்துமலர்

சசரு. மாலைமரு வாததினுன் மாமலர் பூத்துதிர்ந்த
சோலையது போலுஞ் சுரிகுழலாள் - சாலமைக்கு

சசச. மேவு மகத்தொழிய வெண்டாள மேலிலையென்
ருவலுறத் தோட்கணியா வாரத்தாள் - பூவணத்தெம்

சசரு. புத்தமுத வாரியின்மேற் பொன்னனையாள் வைத்தபரி
வத்தனையும் வைக்கு மளவினுண் - மெத்தநிலை

சசசூ. யோங்கு மணிமாடத் துள்ளோ ரரியணையிற்
பூங்கவரி கால்வீசப் போயிருந்து - பாங்குறையு

சசஎ. முற்பருவப் பெண்கட்கு மோகநூ லவ்வவர்தஞ்
சொற்பருவங் கண்டுகண்டு சொல்லுங்காற் - பொற்பிற்

சசஅ. சிலர்கேட்கப் பாடஞ் சிலர்கேட்க வர்த்தஞ்
சிலர்கேட்கச் சங்கை தெளிவித் - துலகேழின்

சசகூ. மன்மதனுல் கைவந்தோர் மற்றிலையென் ருசிரியத்
தன்மை செலுத்துந் தறுவாயிற் - றென்மை

சரு௦. யவனசை யாம லணுவசையா தென்னும்
புவனப் பழமொழிக்குப் புத்தே - ளுவமை

---

சருஅ. ஆவம் - அம்பறாத்தூணி. விசிகம் - அம்பு.

சருகூ. திருமால் - கண்ணபிரான். காளிங்கனென்னும் பாம்பின் படம்.

சசக - உ. வேந்து-உக்கிரபாண்டியன். சையம்-மலை. கைதை-தாழம்பூ.

சசரு. அமைக்கு - மூங்கிலுக்கு. சசச. அகம் - உள்ளிடம்.

சசஎ. மோகநூல் - காமநூல்; 'மன்மதநூல்' என்பர்பின்; சசகூ.

சசகூ. கைவந்தோர் - தேர்ச்சியுற்றோர். தறுவாய் - சமயம்.

சரு௦. அருணைக். ச; தாயுமானவர். எங்கு நிறை. க.

சடுக. தெரிக்குந்தெய் வங்கள் சிகாமணி தோன்றி
மரிக்குந்தெய் வங்கண் மணாளன் - பரிக்கு

சடுஉ. மயனுக்கு மிந்திரற்கு மங்கேழ் முளரி
நயனற்குந் தேவர்க்கு நாயன் - பயனெக்கும்

சடுங. வையைநதித் தீரன் மணிகர் ணிகைத்தீர்த்தன்
சைவநிறை புட்பவனத் தம்பிரான் - றெய்வமறை

சடுச. யார்ப்பவனி யெங்கு மதிரக் கறங்குதிருத்
தேர்ப்பவனி வீதிவரல் செப்பினர் - போர்ப்பவனி

சடுரு. சென்றிளைஞ ராவி செகுத்துண்ணுங் கண்ணார்க்கு
மன்றவுரை செய்நூன் மறந்தெழுந்தாண் - முன்றில்

சடுசு. கடந்தா டிருவீதி கண்டாடேர் முன்னே
நடந்தாள் சிவனை நயந்தா - டடந்தேனா

சடுஎ. யோடாமை வேண்டி யொருகோடி தண்டனிட்டா
ணீடா தரங்கூர நேர்நின்றாள் - வீடாத

சடுஅ. நாமக் கயிலைமலை நாதா புராதனா
காமப் பகையையடர் கண்ணாளா - வாமக்

சடுகூ. கவுரி திருக்கணவா கங்கைமண வாளா
பவன கவனவிடைப் பாகா - வுவமையில்பொற்

சகூ௦. கச்சேற்ற கொம்மைமுலைக் கன்னியரை வீதியிலே
பிச்சேற்ற வந்த பெருமானே - மைச்சேற்கட்

சகூக. பாவணங் கோசைபயில் பாண்டிப் பழம்பதியாம்
பூவணங் கோயில்கொண்ட புண்ணியா - மேவநினைந்

---

சடுக. மணாளன் - தலைவன்; 'தோன்றி மரிக்குந்தெய் வங்கண்மணாளன்' என்பது, "செத்துப்பிறக்கின்ற தெய்வங்கண்மணவாள" (முத்துக். செங்கீரை. க-டு) என்பதைத்தழுவியது.

சடுச. ஆர்ப்பு அவனி எங்கும் அதிர.

சடுரு. மன்ற - தெளிவாக. சடுஎ. வீடாத - அழியாத.

சடுஅ. நாமம் - மிக்கபுகழ். காமப்பகையை - காமனாகியபகையை.

சடுகூ. பவன கவனம் - காற்றைப் போன்றவேகம்.

சகூ௦. பிச்சேற்ற-பித்தேற்ற; "பேராளன் றென்னன்பெருந்துறையான் பிச்சேற்றி" என்பது திருவாசகம், திருவம்மானை, உ.

சகூக. பா அணங்கு - கலைமகள்.

சகூ௨. தானுத மாலை யடுத்துமட லேந்தினேன்
றேனுர்வா யூறநின்று தேங்கினே - ஞனுத

சகூ௩. வண்டு விழக்கண்ணீர் மல்கினேன் பொன்பூத்தேன்
விண்டலர் தூற்ற வெளிநின்றேன் - மண்டி

சகூ௪. வருமார்வத் துற்றேன் மலர்க்கொன்றை யானேன்
றிருமார்வத் துற்றணையச் செய்து - னருடாரா

சகூ௫. யென்றுளை நோக்கி யிடர்நோக்கிச் சம்பரனை
வென்றுனே யீசன் விலக்கிஞ - னின்றுளப்

சகூசு. பேதை முதலாகப் பேரிளம் பெணீருக
மாதர் பலர்மயங்க மாதேவன் - சோதிப்

சகூஎ. படர்வார் சடையெம் பரம்பர னென்று
மடைவார் வினைதீர்க்கு மம்மா - னடியார்

சகூஅ. குழாமருச் சந்நிதியெங் கோமா னதிரு
முழாவருக் கோயின் முதல்வன் - விழாவருத்

சகூகூ. தேருடையா னெங்க டிருப்பூ வணக்காசி
யூருடையான் போந்தா னுலா.

**திருப்பூவணநாதருலா முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

---

சகூ௨ - ச. சிலேடை: தேங்குதல் - நிறைதல், நிலைகுலைதல். வண்டு - வண்டுகள், வளையல்கள். கண்ணீர் - கள் நீர், விழிநீர். பொன்பூத்தல் - பொன்னிறத்ததாகப் பூத்தல், பசலைநிறமடைதல். அலர் - மலர், பலர் கூறும் பழிமொழி. வரும் மார்பம், வரும் ஆர்வம்; மார்பமென்பது மார்வமென்றும் வழங்கும்; "புயந்தழுவுங் கண்ணியுஞ்செவ் விதழி யேமால் பூண்டகயற் கண்ணியுஞ்செவ் விதழி யேமால், வியந்து சொலி னன்னதும்பொன் னிறமே யெங்கண் மின்னிறமும் பொன்னிறமே புயம்பெருமை, லயர்ந்திவள்வா டத்தகுமோ வருட்கண்பாரீ ரருணகிரிப் பெரியீரே யமல ரேநல், வயந்தவிழா வழகரே நினைக்க முத்தி வரந்தருவா ரேமலைமேன் மருந்தனுரே" (அருணைக். கச) என்ற அருமைச்செய்யுளிலும் இப்படியே வேறொருவகையாகக் கொன்றையைத் தலைவிக்கு உவமை கூறியிருத்தல் காண்க.

சகூ௫. சம்பரனை வென்றுனை-சம்பராசுரனைச் சயித்த மன்மதனை ; "சம்பரனுக் கொருபகைவா" கந்த. காமதகன. கூகூ.

ol

### அழகியநாயகர் துதி.

தன்னனையார் தந்தையார் தமரானென் றறியாமற் றனித்த வுன்னைப், பொன்னனையார் வயிற்கருவிற் புகுந்ததனுன் முத்தமிட்டெட் புதல்வன்போல, மின்னனையா ரிடம்பிரியா மணவாள னெனப்புரிந்த விதத்தா லன்றோ, வென்னனையார் களுந்தரிசித் தேத்தினர்பூ வணத்துறைந்தா யெளிதிற்றானே.

---

### சிறப்புப்பாயிரம்.

திருவால வாயரெலாம் வலசித்த ரிரதவா தஞ்செய் தற்கா, வருவாரை வணங்கவவர் மணிமுறுவல் சிறிதரும்பி மலர்க்கணோக்கக், கருவாகிப் பொன்னனையாள் பெற்றெடுத்த புத்திரனோர் கந்த சாமி, பெருவாய்மைப் பூவையுலாப் பாடியதெம் போலியர்கள் பிழைக்கத் தானே.

**[இந்த இரண்டும் பழையசெய்யுட்கள்.]**

மணிமந்திரவிநாயகர் துணை.

---

---

அழகியநாயகர்துதி.

தன் அன்னையார். வயின் - இடம், வயிறு. கரு - திருவுருவம்வார்த்தற்குக்கட்டிய கரு, கருப்பம்.

சிறப்புப்பாயிரம்.

'பொன்னனையாள் பெற்றெடுத்த புத்திரனோர் கந்தசாமி' என்றது, இந்நூலாசிரியர் ஓர் உருத்திரகணிகையின் புதல்வரென்பதைக் குறிப்பிக்கின்றது.

---

# பிரகடன பத்திரம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| **சீவகசிந்தாமணி** நச்சினார்க்கினியருரை, பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் (மூன்றாம் பதிப்பு) ... | 10 | 0 |
| **சிலப்பதிகாரம்** அரும்பதவுரை, அடியார்க்குநல்லாருரை பலவகை ஆராய்ச்சிக்குறிப்புக்களுடன் (இரண்டாம் பதிப்பு) ... | 8 | 12 |
| **மணிமேகலையும்** அரும்பதவுரை முதலியனவும் (இரண்டாம் பதிப்பு) | 6 | 4 |
| **பத்துப்பாட்டு மூலமும்** நச்சினார்க்கினியருரையும் பலவகை ஆராய்ச்சிக்குறிப்புக்களுடன் (இரண்டாம் பதிப்பு) ... | 5 | 0 |

## (எட்டுத்தொகையைச் சார்ந்தவை.)

| | | |
|---|---|---|
| **ஐங்குறுநூறு** மூலமும் உரை முதலியனவும் (இரண்டாம் பதிப்பு)... | 2 | 0 |
| **பதிற்றுப்பத்து** மூலமும் ஷை ,, ... | 1 | 14 |
| **பரிபாடல்** மூலமும் பரிமேலழகருரையும் ஆராய்ச்சிக்குறிப்புடன்... | 2 | 8 |
| **புறநானூறு** மூலமும் பழைய உரை முதலியனவும் ,, (இரண்டாம் பதிப்பு) ... ... ... ... | 5 | 10 |

## (இலக்கணம்.)

| | | |
|---|---|---|
| **புறப்பொருள் வெண்பாமாலை** மூலமும் உரை முதலியனவும் ... | 1 | 14 |
| **நன்னூல்** மூலமும் மயிலைநாதருரை முதலியனவும் ... | 3 | 2 |

## (வசனம்.)

| | | |
|---|---|---|
| புத்த சரித்திரம், பௌத்த தருமம், பௌத்த சங்கம் ... | 0 | 8 |
| மணிமேகலைக் கதைச்சுருக்கம் ... ... ... | 0 | 10 |

## (சைவ நூல்கள்.)

| | | |
|---|---|---|
| செல்வநகர்ப் பெரும்பற்றப் புலியூர்நம்பி இயற்றிய திருவாலவாயுடையார் **திருவிளையாடற்புராணம்** அல்லது **வேம்பத்தூரார் திருவிளையாடல்**, அரும்பதவுரை முதலியவற்றுடன் ... | 2 | 8 |
| தொல்காப்பியத்தேவரியற்றிய **திருப்பாதிரிப்புலியூர்க்கலம்பகம்** | 0 | 4 |
| திருவாவடுதுறையாதீனத்து ஸ்ரீகச்சியப்பமுனிவரியற்றிய **கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டுவிடுதூது** ... ... | 0 | 2 |
| தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் இயற்றிய **திருவாவடுதுறைக்கோவை** அரும்பதவுரை முதலியவற்றுடன் ... | 0 | 8 |

திருவாவடுதுறையாதீனத்து மஹாவித்துவான் **ஸ்ரீமீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்** இயற்றியவை:—

| | | |
|---|---|---|
| **திருப்பெருந்துறைப் புராணம்** அரும்பதவுரை முதலியவற்றுடன் | 1 | 4 |
| **திருவாரூர்த்தியாகராசலீலை** ,, ,, ... | 0 | 12 |
| **சூரைமாநகர்ப்புராணம்** ,, ,, ... | 0 | 8 |
| **மண்ணிப்படிக்கரைப்புராணம்** ,, ,, ... | 0 | 8 |
| **தனியூர்ப்புராணம்** ,, ,, ... | 0 | 2 |

குறிப்பு.—ஒவ்வொன்றிற்கும் தபாற்கூலி வேறு.

